# தெய்வீகக் கதைகள்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# தெய்வீகக் கதைகள்

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

**ஸ்ரீ சுவாமி வேதானந்தா**






**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை ] 1988 [ ரூ.

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக் கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டு ஞானயக்ஞத் தொடரில் 'தெய்வீகக் கதைகள்' என்ற நூலை ஸ்ரீ சுவாமி வேதானந்தா அவர்கள் மிகமிக அற்புதமாக எளிய தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

# தெய்வீகக் கதைகள்

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்தவர்கள்

| | | |
|---|---|---|
| திரு. S. நேசதுரை, கோலாலம்பூர், மலேசியா | ... ரூ. | 500 |
| ஸ்ரீ சுவாமி குகபக்தானந்தா, ,, ,, | ... | 500 |
| திரு. K. பாலசந்திரன், ,, ,, | ... | 500 |
| தெய்வீக வாழ்க்கைச் சங்க கிளை, ஈப்போ ,, | ... | 500 |
| 'குருபக்தி ரத்னு' திரு. V. A. அண்ணுமலை, ,, | ... | 500 |
| திரு. திருமதி. கிருஷ்ணசாமி, ,, ,, | — | 500 |
| திருமதி வள்ளிராஜன், சிங்கப்பூர் | ... | 500 |
| Smt. Lakshmi Natarajan, New Delhi | ... | 351 |
| திரு. K. A. A. சங்கரலிங்கம், திருநெல்வேலி | ... | 200 |
| திரு. A. சுந்தரம், நூற்ருண்டு விழா இலவச மருத்துவமனை, பத்தமடை | ... | 200 |
| திரு. M. விவேகானந்தன், SPIC தூத்துக்குடி | ... | 100 |
| திரு. H. சங்கர்லால், அரவங்காடு | ... | 100 |
| திரு. S. நடராஜன், கொச்சி | ... | 101 |
| திரு. B. T. சண்முகசுந்தரம், கொச்சி | ... | 101 |
| திருமதி அன்னபூரணி அம்மாள், சிதம்பரம் | ... | 100 |
| திருமதி N. ஆண்டாள், சென்னை-31 | ... | 100 |
| செல்வி N. உமாசக்தி, B. A., திருச்சி-21 | — | 100 |
| திரு. M. G. ரங்கராஜு & திருமதி விஜயா, இராசிபுரம் | ... | 100 |
| திருமதி N. கமலம் நீலாகிருஷ்ணன், இராசிபுரம் | ... | 100 |
| திரு. S. R. வரதராஜன், சேந்தமங்கலம் | ... | 100 |
| திரு. R. விஸ்வநாதன், சேலம்-1 | ... | 100 |
| திரு. M. பாலசுப்பரமணியம், B. A., நாமக்கல் | ... | 100 |
| Dr. K. ஜெயராமச்சந்திரன், M. B., B. S., நாமக்கல் | ... | 100 |
| திரு. T. S. P. மனோகரன், விருதுநகர் | ... | 100 |

ௐ

# தெய்வீகக் கதைகள்

## 1. ஓர் போலி வேதாந்தி

ஸ்வாமி பிரஹ்மானந்தர் விசார சாகரம், பஞ்சதசி எனுமிரண்டு வேதாந்த நூல்களைக் கற்ருர். பிரஹ்ம சூத்திரம், விவேக சூடாமணி— இவற்றில் அவருக்கு ஏதோ கொஞ்சம் தெரியும். ஆனுல், அவ்வளவும் படிப்பளவே தவிர வேறல்ல. கர்ம யோகத்தையோ, பக்தி யோகத்தையோ அவர் சாதிக்கவில்லை. சங்கீர்த்தனம் என்ருல் அவருக்குப் பிடிக்காது. சங்கீர்த்தனம் பாடுகிற வர்களையும், கர்ம யோகிகளையும் பார்த்துக் கேலி செய்வது வழக்கம். வேதாந்தத்தைக் கற்ற செருக்கினுல் அவர் இறுமாந்திருந்ததன்றி, தாம் பூரண பிரஹ்மக்ஞானி எனவே கருதினுர்.

மாயையானது பல வழிகளிலும் இயங்குகிறது. தங்கள் செல்வத்தைப் பற்றிக் கர்வித்துக்கொள் வோர் சிலர். தாங்கள் வாசித்துணர்ந்த அறிவுச் செல்வத்தைப் பற்றி இறுமாப்படைகிறவர்கள் சிலர். தாங்கள் எவ்வளவு அழகாயும் பலசாலி களாயும் இருக்கிருேம் என்பதை நினைத்து அகந்தை கொண்டிருக்கிறவர்களும் சிலர். வேதாந்தக் கோட்பாடுகளைக் கற்றிருக்கிருர்கள்; காவி உடை தரித்துக் கமண்டலமும் கோலும் தாங்கி, "சிவோஹம் சிவோஹம்" என உச்சரிக்கிருர்கள். இவர்களிடம் அத்வைத சமதிருஷ்டி நிலை கொஞ்சங் கூட இல்லை. இத்தகைய போலி வேதாந்திகளும் இருக்கிருர்கள். மரியாதைக்குரிய நமது ஸ்வாமி பிரஹ்மானந்தாஜீ மஹராஜை மாயையானது

சும்மா விடவில்லை. குற்றங்கள் எதுவுமின்றி பக்குவமடைந்த உயரிய ஆத்மாவே தாமென்று அவர் கருதினார்.

அவருக்குப் பெரிய தோட்டம் ஒன்று உண்டு. அதில் புஷ்பங்கள், பழங்கள், காய்கறிகள் மலிந்துள்ளன. அதைச் செம்மையாக வைத்துக்கொள்வதில் சிரத்தை காட்டினார். தாவர சாஸ்திரம் கொஞ்சம் தெரியும்; தோட்ட வேலையுந்தெரியும். ஆங்கிலேயர்க்குகந்த காய்கறிச் செடிகளையும், ஒட்டு மரங்களையும் வளர்த்தார். அப்பெரிய தோட்டத்தின் நடுவிலே ஓர் அழகான குடிசையை அமைத்துக் கொண்டார்.

ஒரு நாள் தோட்டத்தில் பசு ஒன்று நுழைந்து காய்கறிகளையும் இலை தழைகளையும் தின்றுவிட்டது. சுவாமிக்கு கோபம் வந்து, அப்பசுவை நன்ருகப் புடைத்து விட்டார். பாவம்! பசு அங்கேயே இறந்து விட்டது. பக்கத்து வீட்டார் ராம்தாஸ் ஸ்ரீ ராமபிரானுடைய பக்தர். வேதாந்தமும் தெரியும். ஸ்வாமிஜீயைப் பார்த்து, ''ஸ்வாமிஜி! நன்கு புடைத்து பசுவைக் கொன்று போட்டீர்களே! இது நியாயமா? ''கோமாதா'' என்று நாம் பசுவை வழிபடவேண்டும். நீங்கள் ஓர் சந்நியாசி. ஈவிரக்கமும், கருணையும் உங்களுக்கு இல்லையே! ''அத்வேஷ்டா சர்வ பூதானும்'' என்று பகவத் கீதையைப் பாராயணம் பண்ணுகிறீர்கள். கண்ண பிரானுக்கு பசுக்கள் என்ருல் உயிர். பசுக்களை மிக்க அன்புடனும் பாதுகாப்பாகவும் வளர்த்து வந்தார். பசு வதை பண்ணிவிட்டீர்கள். நரகத்திற்குத்தான் தாங்கள் போவீர்கள்'' என்று ராம்தாஸ் பேசலானார்.

ஸ்வாமி பிரஹ்மானந்தர், ''ஓ! பக்த ராம் தாஸ்ஜி! நீர் சொல்வது முற்றிலும் பிசகு. மனமும்

இந்திரியங்களும் செயல்படுகிறதை நான் எப்போதும் சாட்சியாக இருந்து பார்க்கிறேன். நான் எச்செயலும் செய்வதில்லை. புலன்கள் பொறிகளை யாவும் இயக்குகின்றன. என் கையின் அதிதேவதையாகிய இந்திரன்தான் பசுவைக் கொன்றது. நான் சுத்தமாக செயலற்றிருக்கிறேன், அகர்த்தன், நிஷ்கிரியன். செயலற்ற ஆத்மா, பிரஹ்மன் நான். எச்செயலும் என்னைத் தீண்டாது. நான் நிர்லிப்தன் (ஒட்டாமலிருப்பவன்). நான் அசங்கன் (எப்போதும் பற்று அற்றவன்). நீரோ சிறு பக்தர். இத்தகைய ஆழ்ந்த தத்துவத்தை உம்மால் அறிய முடியாது. கொஞ்சம் சங்கீர்த்தனம் பாடிவிட்டு, ராமநாம ஜபத்தில் சற்று ஈடுபடுகிறீர். வேதாந்த ஞானம் உமக்கு கிடையாது. வேதாந்த தத்துவமோ மஹத்தானது, ஒப்பற்றது. சங்கீர்த்தனமும், ராமநாம ஜபமும் தய்வு செய்து விட்டுவிடும். என்னிடத்தில் தீக்ஷை பெறும்—உமக்கு 'ஸோஹம்' எனும் மந்திரத்தை உபதேசிக்கிறேன். அப்பால்தான் என்னையும், என் உயர்ந்த தத்துவத்தையும் நீர் உணருவீர்'' என்று சாங்கோபாங்கமாகச் சாற்றினார்.

பக்த ராம்தாஸ், சுவாமிஜீயின் வரட்டுத் தத்துவத்தைக் கேட்டதே, முற்றிலும் பிரமித்துப் போனார். சுவாமிஜீக்கு ஓர் பாடம் புகட்ட வேண்டுமென விரும்பினார். அவரோ உண்மையான பக்தியில் ஆழ்ந்த மஹான். விரும்பும்போது எந்த தெய்வத்தையும் ஆவாகனப்படுத்தக் கூடியவர். இந்திர பகவானை வழிபட்டு, ''ஹே! பகவானே! தாங்கள் கையின் அதிதேவதையாக விளங்குகிற படியால், தாங்களே ப்சுவைக் கொன்றீர்கள் என்றும், சுவாமி பிரஹ்மானந்தர் இச்செயல்மீது யாதொரு சம்பந்தமும் வைத்துக் கொள்ளவில்லை என்றும், அவர் தமது சுயரூபமாகிய ஆத்மா

விலேயே நன்கு நிலைபெற்றிருப்பதாகவும் இப்போது சொல்லிக் கொண்டிருக்கிறார். எனக்குத் தெரிந்த வரையில், அவர் வெறும் வாயளவு வேதாந்தி தான் — ஏதோ வேதாந்தம் உளறுகிறார். எவ்வித தியானமும் அவர் செய்ததே இல்லை. ராம நாமத்தைத் துவேஷிக்கிறார். பக்தியோ, நிஷ்காம்ய சேவையோ அவர்க்கு ஒன்றும் தெரியாது. ஆழ்ந்த காவி ஆடை ஒன்றை அழகாக உடுத்திக் கொண்டு, தண்டு கமண்டலங்களுடன் வீதிவழி நடக்கிறார். பணக்கார கிரஹஸ்தர்களைப் பார்க்கும்போதெல்லாம் ''சிவோஹம் சிவோஹம்'' என்று உச்சரித்துப் பணத்தைத் திரட்டுகிறார். அழகான தோர் தோட்டத்திலே நேர்த்தியான குடிசை கட்டிக் கொண்டார். அவர்க்கு ஓர் பாடம் புகட்டுமாறு திருவருள் புரிக'' என்று பிரார்த்தித்தார்.

அக்கணமே இந்திர பகவான் பக்த ராம்தாஸ் முன்பு பிரத்தியக்ஷமாகி, ''ராம்தாஸ்! உமது பிரார்த்தனையைக் கேட்டேன். தேவையானதைச் செய்கிறேன். இதுபற்றிக் கவலை கொள்ளாதீர். அவரைப்பற்றி எனக்கு ஏற்கனவே தெரியும் — அவருடைய விருத்திகளைப் பற்றியும் சுபாவங்களைப் பற்றியும்,'' என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார்.

இந்திர பகவான் ஒரு வியாபாரிபோல் வடிவந் தாங்கி, சுவாமி பிரஹ்மானந்தரின் முன் தோன்றி, ''போற்றத்தக்க சுவாமிகளே! இது ஓர் அழகான தோட்டம். என் வாழ்க்கையிலே இத்தகைய தோட்டத்தைப் பார்த்ததே இல்லை. இவ்வளவு ரமணீகரமாகச் செய்தது யார்?'' என்று வினவினார். அதற்கு பிரஹ்மானந்தர், ''தோட்டத்தைப் பாதுகாத்து ரமணீயஸ்தலமாகப் பண்ணியது நான்தான். தாவர சாஸ்திரமும் தோட்ட

வேலையும் எனக்கு நன்றாய்த் தெரியும்'' என்றார். பின் வியாபாரி, ''சுவாமிஜி! ரொம்ப சந்தோஷம். இந்த அழகிய குடிசையைக் கட்டியது யார்? கட்டட அமைப்பு நன்றாயிருக்கிறது'' என்று கேட்டார். பிரமானந்தர், ''இதைக் கட்டியது நான்தான். கட்டட பிளான் எழுதவுந் தெரியும்.'' என்றார். வியாபாரி, ''சுவாமிஜி! உண்மையில் பிரமிக்கதக்கதாய் இருக்கிறது'' என்று முகஸ்துதி செய்யவே, சுவாமிஜி மிகுந்த அகந்தை கொண்டார்.

மீண்டும் வியாபாரி, ''சுவாமிஜீ! பசுவைக் கொன்றது யார்? அதைச் சொல்லுங்கள்'' என்று கேட்டார். சுவாமிஜீ, ''எனது கையின் அதிதேவதையாகிய இந்திரன்தான் பசுவைக் கொன்றது. நான் செயலற்ற ஆத்மா. எப்போதும் நான் சாட்சியாக இருக்கிறேன்'' என்று விடை பகர்ந்தார். அதற்கு வியாபாரி, ''சுவாமிஜீ! நீங்கள் சொல்வது முற்றிலும் தவறு. தாங்கள் மருண்டதோர் சந்நியாசி. சாதனையும் சமாதியும் இல்லாத வெறும் வாய் வேதாந்தியாகத் தாங்கள் தோன்றுகிறீர்கள். ஏதோ படித்துவிட்டு எதையோ உளறுகிறீர்கள். தங்களையே தாங்கள் ஏமாற்றிக் கொள்கிறீர்கள். இதுமட்டுமல்ல. பொதுமக்களை யும் வஞ்சிக்கிறீர்கள். உங்கள் ஆத்மாவையே ஏமாற்றுகிறீர்கள். உங்கள் வேலைத் திறமையைப் புகழ்ந்து பேசியபோது, 'குடிசை கட்டினேன், தோட்டத்தைப் பண்படுத்தினேன், தோட்ட வேலை தெரியும், கட்டிட பிளான் எழுதத் தெரியும் என்றீர்கள். பசுவைக் கொன்றதைக் குறித்து கேட்டபோது நீங்கள் நிஷ்காம்யத்தைப் பற்றியும் தத்துவத்தைப் பற்றியும் பேசினீர்கள். இந்திரனிடம் அச்செயலைத் திருப்பி விட்டீர்கள். எந்த மாதிரியான தத்துவம் இது? வேதாந்தமா

இது? தாங்கள் ஓர் போலி வேதாந்தி. வேஷதாரி. கெட்ட சுபாவமுள்ளவர். மித்தியாச்சாரி. உண்மையான ஜீவன் முக்தர் சுக துக்கங்களுக்கும், போற்றுதலுக்கும், தூற்றுதலுக்கும் அப்பாற்பட்டவர். அவரது மனம் உலகத்திலே செத்துப் போய் விட்டது. ஸ்பரிச உணர்ச்சியைத் தருகிற பொறியுடன் அவரது மனம் சம்பந்தப்படவில்லை. ஆகையால், அவர் வெப்பதட்பத்தை உணர மாட்டார். இந்திரியங்கள் எல்லாச் செயல்களையும் செய்கின்றன என்றும், தாங்கள் செயலற்றவர் என்றும் நீங்கள் வெறுமனே சொன்னால், நீங்கள் வெப்பதட்பத்தை இயற்கையாகவே உணரக் கூடாது; புகழ்ச்சி இகழ்ச்சிக்கும், மரியாதை அவமரியாதைக்கும் நீங்கள் பாதிக்கப்படமாட்டீர் கள். இதுதான் பரீட்சை. தவறினால் நீங்கள் முக்த ஆத்மா அன்று—நீங்கள் வெறும் உடலும் இந்திரிய உணர்ச்சிகளுந்தான். இனிமேலாவது இக்கருத்தை நன்கு ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள். இப்போது நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?'' என்று விரிவாக தத்துவத்தை எடுத்து விளக்கினார்.

சுவாமி பிரஹ்மானந்தர் மிக்க அவமானத்தால் தமது தலையைத் தாழ்த்திக் கொண்டார். அவர் வியாபாரியைப் பார்த்து, ''ஹே வியாபாரியே! தாங்கள்தான் உண்மையான வேதாந்தி. இப்போதுதான் வேதாந்தத்தின் உண்மையான கருத்தையுணர்ந்தேன். உண்மையில் நான் எதையும் சாதிக்கவில்லை. விசார சாகரத்தையும் பஞ்சதசியையுந்தான் படித்தேன். உண்மையில் நான் வாய் வேதாந்தி. நான் பெரும் பணந் திரட்டினேன். இனிமேல் இம்மாதிரியாக நடந்து கொள்ளவில்லை. தாங்கள் எனது குரு தேவர். மனனமும் நிதித்தியாசனமும் (தீர்க்க விசாரித்தலும் தியானமும்) பண்ணுகிறேன். எனது

ஞானக் கண்களைத் திறந்ததற்காக தங்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். உங்களுக்கு மீண்டும் மீண்டும் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பிக் கின்றேன். உண்மையில் என்னை அஞ்ஞானமாகிய கடலிலிருந்து ஞானக்கரைக்கு ஏற்றி உயிர் தப்ப வைத்தீர்கள்'' என்று ஆனந்தக் கண்ணீர் ததும்பப் பேசினுர்.

இக்காலத்தில் இத்தகைய வாய் வேதாந்திகள் பலர் இருக்கிறுர்கள். எச்சரிக்கையாய் இருங்கள். அநுபவ வேதாந்திகள் மிகவும் சிலரே — இவர்கள் எளியவர்கள், ஆடம்பரமற்றவர்கள். அன்பும், கருணையும், இரக்கமும் நிறைந்தவர்கள். அஹங் காரம், சுயநலம், காமம், பேராசை முதலிய வற்றிலிருந்து விடுபட்டவர்கள். பணிவுடனிருந்து எதையும் சாதிக்கத் தயாராயிருப்பார்கள். வீண் பேச்சு பேசாமல் நிதானித்து அளவுடன் பேசு வார்கள். அவர்கள் அதிகம் சிந்திப்பார்கள். அதிகம் செயலாற்றுவார்கள்.

# 2. சத்சங்கத்தின் மஹிமை

விஸ்வாமித்திர மஹரிஷிக்கும், வசிஷ்டருக்கும் முன் ஒரு காலத்தில் அபிப்பிராயபேதம் ஏற்பட்டது. விஸ்வாமித்திரர் ஓர் பெரிய தவசி. அவர் தமது தபோ பலத்தினால் மூன்றாவது உலகமொன்றை திரிசங்கு மஹாராஜாவுக்காகச் சிருஷ்டித்தார். விஸ்வாமித்திரர் வசிஷ்டரிடம் ''உலகில் வேறு எல்லாவற்றைக்காட்டிலும் தவந்தான் பெரிது'' என்றார். வசிஷ்டர் இதற்கு மாறாக ''சத்சங்கம் தவத்தைக்காட்டிலும் எவ்வளவோ மேலானது'' என்று கூறினார். பின், அவர்கள் பிரஹ்ம தேவரை அணுகி அவரது அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளுவதென தீர்மானித்தார்கள். அங்ஙனம் அவர்கள் பிரஹ்ம தேவரிடம் போய்த் தமது விஷயங்களைச் சொல்லி அபிப்பிராயங் கேட்டார்கள். பிரஹ்ம தேவர் ''சிருஷ்டிக்கும் காரியத்தில் நான் சுறுசுறுப்பாயிருக்கிறேன். எனக்கு நேரமில்லை. சிவபெருமானைப் போய்க் கேளுங்கள். அவருக்கு நிரம்பவும் ஒய்வு உண்டு. வேறு அலுவல் எதுவும் அவருக்கு இப்போது கிடையாது. பிரளயம் வரும்போது மாத்திரமே அவருடைய அலுவல் ஆரம்பமாகும்'' என்று செப்பினார்.

அப்படியே விஸ்வாமித்திரர் சிவபெருமானைப் பார்க்கச் சென்றார். சிவபெருமான் ''எனது சிறந்த பக்தர்களில் ஒருவரைப் பார்க்கச் செல்லுகிறேன். இப்போது நேரமில்லை. மஹாவிஷ்ணுவிடம் செல்லுங்கள். அவர் தமது பக்தரிடம் பொறுமையாயிருந்து கேட்பார்'' என்றார். விஸ்வாமித்திரரும், வசிஷ்டரும் மஹாவிஷ்ணுவைப் போய்ப் பார்த்தார்கள். ''இந்த விஷயத்தைப் பற்றி என்னால் தீர்ப்புக் கூற முடியாது. தயவு

செய்து ஆதிசேஷரிடம் போங்கள். அவர் தமது ஆயிரம் நாவினுல் இராம நாம மந்திரத்தைச் சதா காலமும் ஜெபித்துக் கொண்டிருக்கிறுர். அவர் ஓர் பெரும் பக்தர்; ஓர் பெரிய ஞானியுங்கூட. இதற்கு முடிவான தீர்ப்புக் கூறுவதற்கு அவர்தான் தக்க நபர்'' என்று மஹாவிஷ்ணு மொழிந்தார்.

பின்பு, அவர்கள் ஆதிசேஷரை அண்டினுர்கள். ஆதிசேஷர், ''நிச்சயமாக, நான் இறுதியான தீர்மானத்தைச் சொல்லுவேன். எனது தலையிலிருக்கும் பூமி பாரத்தைத் தயவு செய்து தீர்த்து வைக்கவும். அப்பால்தான், எனது கருத்தைத் தெரிவிக்க முடியும்'' என்றுர். அப்பால், அவ்விருவரும் ''ஓ! ஆதிசேஷரே! இப்பாரத்தைத் தீர்ப்பதற்கு உபாயஞ் சொல்லுங்கள்'' என்றுர்கள். ஆதிசேஷர் ''உங்களுடைய தவம், சத்சங்கம் ஆகியவற்றின் பலத்தைத் தயவு செய்து எனக்குக் கொடுங்கள். எனக்கு இப்பூபாரம் தீரும்'' என்று கூறினுர்.

விஸ்வாமித்திரர் ''இவ்வளவுதானு? நான் செய்த நூறு வருஷத் தவத்தின் பலனைத் தானமளிக்கிறேன்'' என்றுர். ஆதிசேஷருடைய தலைமேலுள்ள பாரம் நீங்கவில்லை. பின், விஸ்வாமித்திரர் ''இப்போது, நான் செய்த ஆயிரம் வருஷத் தவத்தின் பலனைத் தருகிறேன்'' என்றுர். அப்போதுகூட ஆதிசேஷருடைய சுமை நீங்கினபாடில்லை. பிறகு, விஸ்வாமித்திரர் ''என் வாணுள் முழுதும் செய்த தவத்தின் பலனைத் தருகின்றேன்'' என்றுர். அப்போதுகூட ஆதிசேஷருடைய பூமிபாரம் தீர்ந்தபாடில்லை.

அப்பால் வசிஷ்டர், ''எனது வாழ்க்கையில் ஒரு செக்கண்டு நேரம் செய்த சத்சங்கத்தின்

பலனைத் தருகிறேன்'' என்று கூறினர். உடனே, ஆதிசேஷருடைய தலைச்சுமை நீங்கியது.

அப்பால் விஸ்வாமித்திரர் அவமானத்தினல் தமது தலையைத் தாழ்த்தினர். அவர் ஆதிசேஷரிடமோ, வசிஷ்டரிடமோ ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. தவத்தைக் காட்டிலும் சத்சங்கம் மேலானது என்பதை அவர் முற்றிலும் உணர்ந்தார். தாம் ஓர் தவசி எனும் அகம்பாவம் அடியோடு வீழ்ந்து போயிற்று.

ஓர் முமுக்ஷுக்கு சம்ஸாரம் எனும் சாகரத்தைக் கடப்பதற்கு உதவியளிக்கும் ஓர் பத்திரமான பெரிய படகு சத்சங்கம் ஆகும். சத்சங்கத்தின் மஹிமையை வார்த்தைகளால் சொல்ல இயலாது. சத்சங்கத்தை எல்லாச் சாஸ்திரங்களும் பெரிதும் பாராட்டுகின்றன. சத்சங்கத்தில் ஒருவன் ஈடுபட்டால், அவன் எல்லாவற்றையும் அடைகிருன். சத்சங்கம் ஒருவனுடைய சம்ஸ்காரங்களை அகற்றி அவனுடைய ஹிருதயத்தில் விரக்தி ஊட்டுவதற்கு ஒரே சக்திவாய்ந்த சாதனமாகிறது. மாயையினல் தாக்குண்டு மயங்குவதினின்று முமுக்ஷுக்களைக் காப்பாற்றுவதற்கு சத்சங்கமானது ஓர் மஹத்தான கோட்டையாகிறது. சத்சங்கமின்றி ஆத்மீய முன்னேற்றம் அணுவளவும் சாத்தியமில்லை.

சத்சங்கம், சாந்தி, சந்தோஷம், விசாரம் ஆகியோர் நால்வரும் மோக்ஷவாயிற் காவற்காரர்கள். இவர்களுள் சத்சங்கம் என்பவர் எல்லாவற்றிலும் முதல்வர். அவருடன் நேசம் பாராட்டினல், மற்ற மூவரும் உனக்கு நண்பர்களாவார்கள். மோக்ஷமெனும் மேலான பதத்திற்குள் பிரவேசிக்க எளிதாகும். அதனல் நித்தியானந்தம் பெறுவாய்.

## 3. ஏழை கரி விற்பனையாளன்

மகத நாட்டிலே ஓர் எளிய கரி விற்பனை யாளன் வசித்து வந்தான். அவன் உண்மை பேசு பவன்; மிகுந்த பக்திமான். அவனது குடும்பமோ பெரிது. தொலைவிலுள்ள கானகத்திற்கேகி, மரங் களை வெட்டி எரித்து கரியாக்கிப் பல வருடங்க ளாக விற்று, ஜீவனஞ் செய்து வரலானுன்.

மகத நாட்டரசர் இந்த ஏழையை ஆதரித்துத் தனவந்தனுகச் செய்ய விரும்பினுர். ஒரு நாள் அவர் தமது தர்பாருக்கு அவனை அழைத்து, நகரத்திற்கருகிலே உள்ள சந்தனமரக் காட்டை இனுமாகக் கொடுத்தார். அவ்வெகுமதிக்காகப் பெரிதும் மகிழ்ச்சியடைந்தான் கரி விற்பனையாளன். அவன் தனக்குள் ''தொலைவிலுள்ள கானகத்திற்கு மரம் வெட்டப்போக வேண்டியதில்லை. என் குடிசைக்குச் சமீபத்திலே இக்காடு உள்ளது. நான் சந்தோஷப்படுகிறேன், அரசர் எவ்வளவு தயாள குணம் படைத்தவர்!'' என்றெல்லாம் கூறிக் கொண்டான்.

ஏழை மரவெட்டி அக்காட்டிற்கேகி ஓர் சந்தன மரத்தைச் சாய்த்து எரித்துக் கரியாக்கி வழக்கம் போல ஒரு ரூபாய்க்கு விற்ருன். சில வருஷங்களாக இப்படியே செய்துவரலானுன். தமக்கு இனுமாகக் கொடுக்கப்பட்ட அக்காட்டிலுள்ள எல்லா சந்தன மரங்களையும் வெட்டித் தீர்த்தான். ஒரே ஒரு மரம்தான் மிச்சம்.

அரசர் சந்தனக்காட்டிற்கு விஜயஞ் செய்தார். அதற்குள், கரி விற்பனையாளன், பெருத்த பணக்காரனுகியிருக்கலாமென்ற கருத்து அரசருக்கு.

அதே பழைய குடிசையிலேயே அவன் வசிப்பதைக் கண்ணுற்றார். உடனே அரசர், "சந்தன மரங்களை யெல்லாம் என்ன செய்தாய் அப்பா!" என்று வினவினார். அதற்கு அவ்வேழை, "தினமும் மரத்தின் ஓர் பாகத்தை எரிப்பேன். அக்கரியை ஒரு ரூபாய்க்கு விற்பேன். இப்படி ஜீவனம் நடந்தது" என்றான்.

அரசர், "ஏழை ஆத்மா! பெருங்குற்றம் பண்ணிவிட்டாய்! அவையாவும் சாதாரண மரங்கள் அல்ல. அது ஒவ்வொன்றும் விலையுயர்ந்த சந்தன மரம். சந்தனக் கட்டைகளாகவே கடைகளில் போய் விற்றிருந்தால், நீ ஓர் பெரிய கோடீஸ்வரனாகியிருக்க வேண்டும். இது சமயத்தில் எஞ்சியுள்ள ஒரு சந்தன மரத்தின் கட்டைகளை யாவது விற்பனை செய், மிக்க திரவியம் கிடைக்கும்" என்று புத்திமதி கூறினார். அங்ஙனமே அந்த ஒரு சந்தன மரத்தை வெட்டிக் கட்டைகளாக்கி விற்றதில் அவனுக்குப் பத்தாயிரம் ரூபாய் கிடைத்தது.

ஓ! மனிதா! இந்த தேகம் ஓர் காடு. தேகி தான் ஏழை கரி விற்பனையாளன். அரசர்தான் பரமாத்மா மூச்சுதான் சந்தனக்கட்டை. அறியாமையால், எப்படி அந்த ஏழை, சந்தனக் காட்டைக் கரியாக்கி விற்றுத் தொலைத்தானோ, அப்படியே அஞ்ஞானத்தினால் இந்திரிய சுகங்களிலே நீயும் மூச்சுக்காற்றை வீணாக்குகிறாய். (மூச்சுக்காற்று தான் சுவாசம், பிராணன்). நீயும் கூட பெருங் குற்றம் பண்ணுகிறாய். தினந்தோறும் உனது வாழ்க்கை வீணாகக் கழிந்துபோகிறது. இவ் வாழ்க்கை கடவுளைச் சாக்ஷாத்கரிப்பதற்காகவே ஏற்பட்டது. பிராணன் மிக்க விலையுயர்ந்தது. காலமோ மிக மிக விலையுயர்ந்தது. ஜபம்,

தியானம், சங்கீர்த்தனம், மந்திரம் எழுதுதல், நிஷ்காம்ய சேவை, ஆன்மீய நூல்களைப் பாராயணஞ் செய்தல் — இவைபோன்ற ஆத்ம சாதனைகளிலே ஒவ்வொரு நொடிப் பொழுதையும் நீ பிரயோஜனப்படுத்த வேண்டும். சாப்பிடுவதிலும், வீண் பேச்சுக்களிலும், இந்திரிய நுகர்ச்சிகளிலும் உனது காலத்தைப் பாழாக்குகிறாய். மரண தேவனின் முரட்டுப் பிடியில் உழலும்போது அழுதழுது பச்சாத்தாபப்படுவதில் என்ன பயன்? மூலப் பரம்பொருளை ஒவ்வொரு மூச்சின்போதும் ஞாபகப்படுத்திக்கொள். ஒருவன் மரணவாயிலிலிருக்கும்போது, பெற்றோர்கள் மருத்துவரிடம், ''அன்புள்ள மருத்துவ ஐயாவே! ஊசி மருந்துகளினாலும், உத்தீபனமூட்டும் மருந்துகளினாலும் என் மகனின் உயிரை இன்னஞ் சிறிது காலத்திற்காவது நீடிக்கச் செய்யுங்கள். காலைப் புகை வண்டியிலே பம்பாயிலிருந்து வருகிற எனது மகனை எதிர்பார்க்கிறேன். எனது மகனைப் பார்க்க வேண்டுமென்ற பேராவல் அவளுக்கு. தயவு பண்ணுங்கள்'' என்று கெஞ்சிக் கதறுகிறார்கள். மருத்துவ நிபுணர்களாலுங்கூட ஒரு நிமிடமேனும் உயிரை நீடிக்கச் செய்ய முடியாது. இப்பொழுது தான் மக்கள் காலத்தின் அருமை பெருமையை உணர்ந்து கொள்கிறார்கள். சூதாட்டங்களிலும், குடிபோதைகளிலும், சினிமாப் படங்களிலும், சீட்டாட்டங்களிலும், குதிரைப் பந்தயங்களிலும், ஸ்திரீ போகங்களிலும், காலத்தை மக்கள் வீணாக்குகிறார்கள். என்ன பரிதாபமான நிலை!

விலைமதிக்கொணாத இவ்வாழ்க்கையை வியர்த்தமாக்கிக் கரியாக்கிவிட்டாய்! பல்லாண்டுகள் பாழாகின. இப்போதேனும் கண் விழித்துக் கொள்.

# 4. பிரம்மச்சாரி கக்கு

கக்கு என்னும் இந்த பிரம்மச்சாரி மிகவும் புத்திசாலியான இளைஞன். அவனுக்கு இரண்டு மொழிகள் தெரியும். நல்ல எழுத்தாளன். ஒல்லியான, உயரமான உருவம் உடையவன். திறமைசாலி. இருமொழிகளிலும் அழகாக எழுதக் கூடியவன். வெறுங்காலில் நடப்பான். வேட்டியும், மேலுக்கு ஒரு துண்டுமே அவன் உடுத்தும் ஆடை.

குளிர் காலத்தில் கூட அவன் வெதுவெதுப்புத் தரும் ஆடைகளை உடுப்பதில்லை. துப்பட்டியைப் பயன்படுத்தமாட்டான். ஒரு நாள் இரவு மிக அதிகக் குளிராயிருந்ததால் ஒரு ஜமுக்காளத்தைப் போர்த்துக்கொண்டான். அவன் தத்துவங்கள் மற்றும் கொள்கைகள் பற்றிப் பேசுவான். அவன் பேசுவதைக் கேட்டால் அவன் உயர்ந்த கொள்கைகள் உடையவன் என்றும், நிறைந்த கருணையும், தியாக மனப்பான்மையும், தொண்டு செய்யும் ஆர்வமும் உடையவன் என்றும் முடிவுக்கு வந்துவிடுவீர்கள். ''நான் நேற்றிரவு தூங்கவே இல்லை. பசியால் வாடிக்கொண்டிருக்கும் பல்லா யிரம் மக்களைப்பற்றி நினைத்துக் கண்ணீர் சிந்தி னேன். ஓர் ஆசிரமத்தைத் தொடங்கி மக்களின் துயரங்களைப் போக்கவேண்டும் என்று எண்ணி யுள்ளேன்'' என்று உங்களிடம் கூறுவான்.

வேகமாக எழுதுவான். ஒரு புத்தகத்தை ஒரு வாரத்தில் அவனால் எழுத முடியும். சிறந்த பிரசாரகன். துணிச்சலும், பிடிவாதமும், தைரியமும் உடையவன். பொருள் எதுவும் சேர்த்து வைக்கவில்லை. அளவாகச் சாப்பிடுவான். வீரமும், சுயமாகச் செயலாற்றும் திறனும், ஊக்கமும் உடையவன். முயற்சியுடையவன்.

கடினமாக உழைப்பவன். மக்களைக் கவரும் திறம் உடையவன்.

''இதோ இந்த சுவாமிஜிதான் என் குருநாதர். சட்டசபை உறுப்பினராக உள்ள அதோ அவர் என் நண்பர். இந்தப் பேராசிரியர் என் மாணுக்கர். அந்தப் பெரிய மனிதரிடம் இந்த விஷயம் பற்றி முழுமையாக விவாதித்தேன்'' என்பான்.

ஆரம்பத்தில் நல்ல காரியங்களைச் செய்து வந்தான். கொஞ்ச காலம் சென்றதும் அங்குமிங்கு மாக கொஞ்சத்தில் ஆரம்பித்துப் பின் நூறு, இரு நூறு என்று பணம் வாங்கத் தொடங்கினுன். ஒரு மாதத்தில் திரும்பத் தந்து விடுவதாகச் சொல்லி வாங்கினுன். வாக்குறுதியை அவன் காப்பாற்றியதில்லை. சில துண்டுப் பிரசுரங்கள் அச்சடிக்கத் தொடங்கி அதன் மூலம் சில அச்சகத் தாரிடமும், புத்தகக் கடைக்காரர்களிடமும் நட்புக் கொண்டான். இரண்டாம் வகுப்பில் பிரயாணம் செய்து ஒரு பெரிய மனிதன் என்றும், செல்வாக்குள்ளவன் என்றும் மக்கள் நினைக்கும் படியாக நடந்து கொண்டான். இன்னும் ஒரு வாரத்தில் 'செக்' வந்துவிடும் என்பான். பயங்கர மாகப் பொய் பேசுவான். சில நாட்களில் அந்த இடத்திலிருந்து ஓடிப்போவான். சில நிறுவனங் களுக்குச் சென்று சில பொருள்கள் தேவை என்று பட்டியல் தருவான். சில புத்தகக் கம்பெனிகளில் கடனுகப் புத்தகங்கள் வாங்குவான். சில பத்திரிக் கைகளுக்குக் கட்டுரைகள் எழுதுவான். அங்கு மிங்கும் சிறு சொற்பொழிவுகள் செய்வான். பின்னர், அங்கிருந்து வேறிடம் சென்றுவிடுவான்.

இந்தப் பிரம்மச்சாரி இப்போது ஒரு சந்நியாசி. தத்துவம் மற்றும் யோகாசனப்பள்ளி ஒன்றை ஆரம்பித்துள்ளான்.

ஒருவரது உருவத்தைப்பார்த்து அவரை நம்பி விடக்கூடாது. புத்திசாலித்தனமானவர்கள் மற்றவர்களை ஏமாற்றுகிறார்கள். திறமையும், தகுதியும் உள்ள மேலே குறிப்பிடப்பட்டுள்ள இந்தப் பிரம்மச்சாரி இப்படி எல்லாம் நடப்பான் என்று நீங்கள் எண்ணியதுண்டா? புரிந்துகொள்ள முடியாத இந்த உலகத்தில் புரிந்துகொள்ள முடியாத மக்கள் இருக்கிறார்கள். நீங்கள் மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டும். தாடி, கௌபீனம், சடைமுடி, வேப்பிலை அல்லது கோமய உணவு, காவியுடை, நாற்பது நாள் விரதம், தத்துவம், மௌனம் ஆகியவை ஒருவரை சாதுவாகவோ, சந்நியாசியாகவோ, யோகியாகவோ மாற்ற மாட்டா. ஆகவே எச்சரிக்கையுடன் இருங்கள்.

பிரம்மச்சாரிகளும், பக்திமான்களும் குற்றமில்லாத பண்புகளைக் கொண்டிருக்க வேண்டும். ஆன்மீக ஈடுபாடு கொண்டபின் மக்களை ஏமாற்றுவது மிகவும் கொடுமையானதாகும். இவர்களுக்கு விமோசனமே இல்லை. பொதுவாகப் பக்திமான்களின் நோக்கம் சிறந்த மேடைப் பேச்சாளராக வேண்டும் என்பதாகவே இருக்கிறது. அவர்கள் தங்களது பழமையான, முறையற்ற, திருத்த முடியாத, கொடிய போக்கை மாற்றிக் கொள்ளவோ, உயர் பண்புகளைப் பெறவோ விரும்புவதில்லை. தங்களது கொடிய பழக்கங்களையும், வஞ்சகத்தையும் விட்டொழிக்க விரும்புவதில்லை. ஆகவே சந்யாசத்தையும், நிவ்ருதி மார்க்கத்தையும் மேற்கொண்டு நீண்டகாலமானாலும் தொடக்க நிலையிலேயே இருக்கிறார்கள். கொடிய வஞ்சகத் தன்மை அவர்களது மனதின் ஒரு மூலையில் பதுங்கிக் கொண்டிருக்கிறது. வேதாந்தம் பற்றி அவர்களுக்குக் கொஞ்சம்

சொல்லத் தெரியும். யோகத்தைப் பற்றி ஆதார மில்லாமல் பேசத் தெரியும். அதற்குமேல் ஒன்றும் தெரியாது. இந்த 'நிவ்ருதி' மார்க்கத்தில் கக்குவைப் போன்றவர்கள் நிறைய பேர் இருக் கிறார்கள்.

ஓ கக்கு! உன் போக்கை மாற்றிக்கொள்ள முயற்சி செய். உண்மையான யோகியாகவும் சாதுவாகவும் மாறுவாயாக. கடுந்தவம் மேற் கொள். விரதமிரு. உன் மனத்தைத் தூய்மை யாக்கிக் கொள். இன்னும் உனக்குக் காலமிருக் கிறது. நீ இளைஞன். சுற்றிலும் உள்ளவர்களை மேலும் கெடுக்காதே. உனக்காக வருந்துகிறேன். திறமையும், வலிமையும் உன்னிடம் உள்ளன. ஆனால் கீழ்த்தரமான செயல்களில் ஈடுபட்டுள்ளாய். உன் பெயரைக் கெடுத்துக் கொண்டாய். சாதுக்களின் கூட்டத்துக்கே நீ ஒரு அவமானச் சின்னம். உயரக் கிளம்பு. தீய வழிகளை அகற்றி, பயமின்றி யோக மார்க்கத்தில் நடை போடு வதற்கான சக்தியை இறைவன் உனக்கு அருளட்டும்! போற்றத்தக்க யோகியாக நீ பிரகாசிப்பாயாக!

# 5. நசிகேதஸ்

கதோபநிஷத்தில் கூறப்பட்டிருக்கும் நசிகேதஸின் கதை உங்களுக்குத் தெரியும். அவன் தகப்பனர் கௌதமர் என்பவர் ஓர் யாகத்தைச் செய்தார். ''என்னை யாருக்குக் கொடுக்கப் போகிறீர்கள்? என்று நசிகேதஸ் கேட்க, அவர் ''மரணக் கடவுளுக்குக் கொடுக்கப்போகிறேன் உன்னை'' என்று பதில் கூறினர்.

மரண தேவனகிய யமதர்ம ராஜாவின் ராஜ்யத்திற்கு நசிகேதஸ் சென்றுன். அப்போது யமதர்ம ராஜா வெளியே சென்றிருந்தபடியாலும், அரசனுக்குப் பதிலாக வரவேற்பதற்கு வேறு எவரும் இல்லாததாலும், நசிகேதஸ் எவ்வித உணவு வசதிகளோ, உபசரிப்புக்களோ இன்றி மூன்று பகல் இரவுகள் நின்று கொண்டிருந்தான். யமதர்ம ராஜா திரும்பிவந்து, தமக்காகக் காத்துக் கொண்டிருக்கும் நசிகேதஸ் முகத்தைப் பார்த்து, ''ஓ! பிராம்மணனே! உயரிய மரியாதைக்குரிய உத்தம விருந்தாளியே! மூன்றிரவு அன்ன ஆகாரமின்றி என்னுடைய ராஜ்யத்தில் தவங் கிடந்தாய்! கேள், மூன்று வரங்களைத் தருகிறேன்'' என்று உபசரித்தார். அதற்கு நசிகேதஸ், தன் ஊருக்குத் திரும்பிப் போனல் தகப்பனர் தன்னை அன்புடன் வரவேற்க வேண்டுமென்ற வரத்தை முதலாவதாகக் கேட்டான். யமதர்ம ராஜா, ''முன்போலவே உன்னை தகப்பனர் ஏற்றுக் கொள்வார். சாந்தியோடு இரவில் தூங்குவார். இங்கிருந்து திரும்பிப்போகும் உன்னைப் பார்த்ததும் கோபத்தை விட்டு விடுவார். இந்த வரம் தந்தேன்'' என்றுர். இரண்டாவது வரம் தெய்வ லோக அக்கினியைப் பற்றியது. அவனுடைய பெயரால் தெய்வலோக அக்கினி அழைக்கப்படு

மென்றும், அது அவனுக்குத் தெரியுமென்றும் யமதேவர் இயம்பினர். மரணத்தின் மர்மத்தைப் பற்றிக் கேட்டான் மூன்றுவது வரமாக. ''யமதர்ம ராஜாவே! எனக்கு நெடுங்காலமாக ஓர் சந்தேகம் இருந்து வருகிறது. ஒருவன் இறந்தால், அவன் இருக்கிருன் எனச் சிலரும், இல்லை என வேறு சிலரும் சொல்லுகிறுர்கள். இதைப் பற்றி நான் திட்டமாகத் தெரிந்து கொள்ளவேண்டும். இதன் மர்மத்தைச் சொல்லுங்கள். தங்கள் மரணப் பிடியினின்று மனிதன் தப்பக்கூடுமா?'' என்று வினவினன்.

யமதர்ம ராஜா, ''இதெல்லாம் கேட்காதே. இதில் தேவர்களுக்கும் சந்தேகம் உண்டு. இதைப் புரிந்து கொள்வது சுலபமும் அல்ல. இது வெகு சூக்ஷ்மமானது. நசிகேதஸே! இதைத் தவிர வேறு வரம் கேள். இதைப்பற்றி என்னை நிர்ப்பந்திக் காதே. பிள்ளைகளும், பேரன்களும், பொன்னும், பொருளும், குதிரைகளும், பூஸ்திதிகளும், நீண்டாயுளும், உனக்குப் பணிவிடை செய்ய சௌந்தரியமான ஸ்திரீகளும் ரதங்களும் பிறவும் அமோகமாகத் தருகிறேன்'' என்று ஆசை மொழி களைச் சொன்னர்.

நசிகேதஸ், ''தர்மப் பிரபுவே! இவை யாவும் மாயைப் பொருள்கள். இந்திரியங்களின் வலுவைக் கரைத்துக் களைப்படையச் செய்யும். நீண்டாயுள் என்பதுகூட கொஞ்ச காலந்தான். நித்தியத்துவத் திற்கு ஒப்பிடும் போது இதெல்லாம் பூஜ்யந்தான். ரமணீய ரதிகளையும், ரதங்களையும், நாட்டியத்தை யும் இன்னிசையையும் தாங்களே அனுபவியுங்கள். செல்வத்திஞல் யாரையும் மகிழ்வுறச் செய்ய முடியாது. தங்கள் மரணவாயிலிருந்து எங்ஙனம் தப்பலாம்? இதற்கு விடையாகிற வரத்தைக் கொடுங்கள் — இது ஒன்றே நல்லது'' என்று தனது விருப்பத்தைத் தெரிவித்து வினவைக் கிளப்பினன்.

யமதர்ம ராஜா, ஆத்மஞானம் பெறுவதற்கு அருகதை வாய்ந்த உத்தம மாணவன் அச்சிறுவன் என்று கண்டுகொண்டார். மரணத்தினின்று மனிதன் எங்ஙனம் தப்பலாமென்பதைக் கூறினார். அவர் "ஹே நசிகேதஸ்! நித்தியத்துவம் பெறுவதற்கான வழியை உனக்குச் சொல்லுகிறேன். ஒருமைப்பட்ட மனத்துடன் உற்றுக்கேள். மனிதன் ஆசைகளால் கட்டுண்டு கிடக்கிறான். இந்த ஆசைகள் ஐம்புலன்களிடத்துப் பிறந்தவை. இவை மனிதனை ஜனன மரணச் சக்கரத்தில் பிணைத்து விடுகின்றன. ஆசையை அவன் அழித்து மனதையும் இந்திரியங்களையும் அடக்கவேண்டும். கையாளவேண்டிய முதலாவது படி இதுதான். உடல் ஓர் தேர் போன்றது. இந்திரியங்கள் குதிரைகளைப் போன்றவை. மனம் கடிவாளங்கள்; புத்திதான் சாரதி; தேரில் அதிபதியாக அமர்ந்துள்ள பிரபு ஆத்மா; இந்திரிய நுகர்ச்சிப் பொருள்கள் சாலைகள். குதிரைகள் இந்திரிய நுகர்ச்சிப்பொருள்களை நாடி நான்கு காலால் பாய்கின்றன. தேரையும் இழுத்துச் செல்கின்றன. நல்ல பாதையைக் காட்டவேண்டும். பகுத்தறிவு அற்றவனும், மனத்தை எப்போதும் கட்டுக்கடக்கத் தெரியாதவனும், இந்திரியங்களை அடக்கியாளத் தெரியாதவனும், கட்டுக்கடங்காத சாரதியின் குதிரைகளைப்போல உத்தேச இலட்சியத்தை அடையமாட்டான். ஆனால் அவன் ஜனன மரணச் சுழலிலே சிக்கித் தவிக்கிறான். யார் ஒருவன் தக்க அறிவு கொண்டு மனத்தை எப்போதும் அடக்கியாளுகிறானோ, அவன், நன்கு பயிலப்பெற்ற குதிரைகளைப் போன்று, இந்திரியங்களைத் தன் ஆதிக்கத்தில் அடக்குகிறான். மீண்டும் ஜனனமில்லாத முக்தி நிலையைப் பெறுகிறான். பிரயாணத்தின் இறுதி ஸ்தலமாகிய மகாவிஷ்ணுவின் வைகுண்ட பதவியை அடைகிறான்" என்றார்.

மீண்டும் யமதர்ம ராஜா, ''ஹிருதயக் குகையில் வாசஞ் செய்யும் ஆத்மாவை, நித்திய வஸ்துவை, ஏகமாகிய அந்தப் பெரிய பொருளைத் தியானஞ் செய். பரமாத்மாவிலே உன் மனத்தை லயிக்கச் செய். ஐம்புலன்களின் வாயிலாக எழுகின்ற ஆசைகளை அழித்து ஒழித்துக் கட்டிவிட்டால், அஞ்ஞானமாகிய மூன்று முடிச்சுக்களையும் அறுத்தெறிந்து விட்டால், அப்பால் நீ நித்தியத்துவம், ஆத்ம சாக்ஷாத்காரம், பிரமக்ஞானம் அடைகிறவனாவாய். இங்ஙனம், நீ மரணத்தை வெல்லலாம். நசிகேதஸ்! இதுதான் மரணத்தின் மர்மம். இந்த ஆத்மாவை பலவீனமானவர்களாலும், இந்திரிய சுகங்களை அநுபவிக்கிறவர்களாலும் கண்டு கொள்ள முடியாது. இந்த ஆத்மா தர்க்கங்களினாலோ, உபந்நியாசங்களினாலோ அல்லது படிப்பினாலோ அடையப்படும் பொருள் அல்ல. அவன் யாரைத் தேர்ந்தெடுக்கிறானோ, அவனுக்கே அவன் தன்னைக் காட்டிக்கொள்கிறான். இத் தேர்வு எப்படி நிச்சயிக்கப்படுகிறது? முமுக்ஷுவின் தூய்மையான சுயநலமற்ற வாழ்க்கையே தேர்வுக்கு வழி வகுக்கிறது. எழுந்திருங்கள்! எச்சரிக்கை கொள்ளுங்கள்! பெரிய ஞானகுருக்களைப் போய்த் தரிசித்து உபதேசம் பெறுங்கள். அதிசயமான ஆத்மாவை சாக்ஷாத்கரியுங்கள். கத்தியின் கூர்மையான முனையைப் போன்று, இப்பாதை கடப்பதற்கு கடினமாய் அமைந்துள்ளது. இங்ஙனம் மகான்கள், மகரிஷிகள் சாற்றியுள்ளார்கள்'' என்று யமதர்ம ராஜா உபதேசித்தார்.

நசிகேதஸ் யமதர்ம ராஜாவிடமிருந்து யோகத்தின் சாராம்சங்களையும் உணர்ந்து, ஆசாபாசங்களைக் கடந்து, அழுக்குகளை அகற்றி, மரணத்தை வென்று பிரம்மனை அடைந்தான். இதுபோலவே, ஆத்மாவின் இயற்கையை உணர்ந்து ஒழுகினால் பிரம்மத்வம் யாருமே பெறலாம். ஓம் தத் ஸத்.

# 6. பூனைகள் இரண்டுடன் பூஜை

கான்பூரில் வசித்து வந்த ராம்ஞத் மிஸ்ரா என்பவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானை தினமும் சேவித்து வருவார். அதிகாலையில் ஸ்னனம் செய்துவிட்டுத் தமது பூஜை அறையில் புகுந்து ஸ்ரீ கிருஷ்ண பகவான் விக்ரகத்தின் முன் பக்தியோடு அமர்ந்து நித்திய பூஜை நிகழ்த்துவார். பகவானுக்கு நிவேதித்த பக்ஷணங்களை பூனைகள் இரண்டு புசித்துக் கொண்டு வந்ததை அறிந்தார். வெகுண்டார். என்ன செய்யலாமென்று யோசித்தார். தினமும் பூஜை செய்யும்போது பூனைகள் இரண்டையும் கம்பத்தில் கட்டிவிட்டார். அவருடைய மகன் போலநாத் மிஸ்ரா என்பவன் இதைக் கண்டு, பூனைகளைக் கட்டிப் போட்டுப் பூஜை செய்தால் ரொம்பவும் புண்ணியம் எனக் கருதினன். அவனும் தன் அறையில் பூஜை செய்யும்போது பூனைகளைக் கட்டிப்போட்டான்.

ஒரு நாள் ராம்ஞத் மிஸ்ரா தமது மகன் அறையில் பூனைகள் கட்டிப்போட்டிருப்பதைக் கண்டார். ''ஏன் நீ பூனைகளைக் கட்டிப்போட்டிருக் கிறுய்?'' என்று கேட்கவே, போலநாத் ''மரியாதைக்குரிய பிதாவே! உங்கள் பூஜை அறையில் ஓர் கம்பத்தில் இரண்டு பூனைகள் கட்டிப் போட்டிருப்பதைக் கண்டேன்; பகவானை வழி படும்போது இரண்டு பூனைகளைக் கட்டி வைக்க வேண்டுமென்பது ஐதிகம் போலும்! இப்படிச் செய்தால் ஸ்ரேயஸ் உண்டாகுமென்று எண்ணி னேன். மற்ற விபரம் எனக்குத் தெரியாது'' என்று பதிலிறுத்தினன்.

இத்தகைய பூஜையைத்தான் பலரும் செய்து வருகிறுர்கள். தகப்பனர் ஏதோ சில சாதனை,

சேவை, பிரார்த்தனை அல்லது கிரியைகள் பண்ணு கிறார். இதைக் காணும் மகன் தகப்பனாரைப் பின் பற்றித் தன்னையும் பக்திமானாகவும், மதாசார முள்ளவனாகவும் மக்கள் நினைக்கட்டுமென்ற கருத்துடன் பூஜை செய்து வருகிறான்.

பூஜையின் வழிவகைகளை நீர் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். நீர் உச்சரிக்கிற சுலோகம் பதிகம் அல்லது பாட்டு இவற்றின் உட்கருத்தை உணர வேண்டும். கிரியைகளின் கருத்தையும் மந்திரங்களின் பொருளையும், ஜபம், வழிபாடு இவற்றினால் ஏற்படும் நலன்களையும் பற்றி அறிந்திருக்க வேண்டும். அளவிறந்த பக்தியும், சிரத்தையும், ஏகாக்ரகமும் கொள்ள வேண்டும். பகவந் நாமத்திலே ருசிகொள்ள வேண்டும். அதாவது பகவந் நாமத்தை உச்சரிப்பதில் உமக்கு அலாதி பக்தி பிறத்தல் வேண்டும். உபாஸனா சாஸ்திரம், ஜபயோகம், மந்திரயோகம், பக்தியோகம் ஆகியவற்றையும் நீர் கற்றுத் தெளிந் திருக்க வேண்டும். கடவுள், கடவுள் தன்மை இவற்றைப் பற்றித் தெளிவான முறையில் படித்துணர வேண்டும். வைராக்கியத்தை விருத்தி செய்யவும். மந்திரம் ஜபித்தலால் எங்ஙனம் மனத்திலுள்ள மாசு களையப் பட்டுத் தூய்மை பெறுகிறதென்பதையும், தமோ ரஜோ குணங்கள் எங்ஙனம் தலைமறைந் தோடுகின்றனவென்பதையும், மனத்திலே எங்ஙனம் ஸத்வம் மேலோங்குகின்றதென்பதையும், மனுஷ் யத் தன்மையை எங்ஙனம் தெய்வீகத் தன்மையாக மாற்றுகிறதென்பதை நீர் அறியவேண்டும். அப் போதுதான் அதிகமான பலன்களைப் பெற்றவர் ஆவீர். அப்போதுதான் ஆத்மீக அறிவிலே துரித மான முன்னேற்றம் அடைவீர். நமது நண்பன் போலநாத் போன்று, இரண்டு பூனைகளைக் கட்டிப்

போடாதீர் பூஜை அறையிலே! விசாரிக்கவும். சிந்திக்கவும். தியானிக்கவும்.

மத ஆசார ஹீனர்களுக்கு மத ஆசாரஹீன முள்ள மக்களே பிறப்பார்கள். பெற்றோர்கள் தாமே தெய்வீக பாரமார்த்திக வாழ்க்கையை நடத்த வேண்டும். நன்கு கற்றுத் தெளிந்தவர்களா யிருத்தல் வேண்டும். அவர்கள் தங்கள் குழந்தை களைச் சிறுவயது முதற் கொண்டே ஆத்மீய நெறியில் தகுந்தவாறு பழக்க வேண்டும். அப்போது பூலோகத்திலே உமது வீடு வைகுண்டம் ஆகும். அப்போதுதான் சாந்தி, நேர்மை, செழிப்பு, மகிழ்ச்சி இவை வீட்டில் தென்படும். மதம் அற்ற வாழ்க்கையானது பாழ்பட்ட உண்மையான மரணமே ஆகும்.

# 7. ராஜா விவேகிநாதர்

தர்மம் எல்லாவகை ஆபத்துக்களிலிருந்தும் ஒருவனைக் காப்பாற்றுகிறது. அதர்மமோ, கேட்டையும் அழிவையும் உண்டாக்குகிறது. இப் பூவுலகத்திலிருக்கிறபோதே தர்மத்தைக் கைப்பிடித்தால், இகத்திலும் பரத்திலும் இன்பத்தைப் பெறுவாய்; உன்னுடைய கீர்த்தி நீடூழி காலம் விளங்கும். அதர்மத்தைக் கைக்கொண்டால், உன்னை ஒவ்வொரு படித்தரத்திலும் தவறுகளும் பொல்லாங்குகளும் தடைப்படுத்தும். உதாரணமாக, யுதிஷ்டிர மகாராஜாவையும் துரியோதனனையும் எடுத்துக்கொள்வோம். யுதிஷ்டிர மகாராஜாவை (தர்மராஜா) நாம் எல்லோரும் ஒவ்வொரு நாளும் நினைக்கிறோம். ஆனால் ஒருவனும் துரியோதனனை நினைப்பதே கிடையாது. துரியோதனன் என்று கூறும்போதே, அருவருப்பு உண்டாகிறது.

பண்டைக் காலத்தில் வாழ்ந்த பெருமக்கள் பலரும் தங்கள் உயிரைக் கொடுத்தாகிலும் தர்மத்தைச் சாதித்தார்கள். ஆகையால் பேரும் பிரக்யாதியும் பெற்றார்கள். தங்கள் வாழ்க்கையை தர்மத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, வாழ்க்கையைப் பற்றிய மதிப்பு பூஜ்யமெனக் கொள்ளலானார்கள். எவ்வளவு விடாப்பிடியாக ஹரிச்சந்திரன் சத்தியத்தைச் சாதித்தான் என்பதைப் பாருங்கள். தனது சொந்த மனைவியையே வாளால் வெட்டும்படி உத்தரவாயிற்று. தனது கடமையெனக்கொண்டு, அவளைக் கொல்லுவதற்கு எவ்வித தயக்கமும் காட்டவில்லை "இவள் எனது மனைவி. இவளை எப்படி நான் வெட்டுவது?" என்று நினைத்துக்கூட பார்க்கவில்லை. ஆனால் அவன், "மசானத்தைக் காவல் காக்கிறவன் நான். சிரச்சேதனம் பண்ணுமாறு மன்னர் ஆக்ஞையிட்டார்.

இவள் எனது மனைவியாகவோ அல்லது வேறு எவளாகவாவது இருக்கலாம். எனது கடமையை நான் செய்தே ஆகவேண்டும்'' என்று எண்ண மிட்டான். அப்போது சிவபெருமானே அங்கு பிரசன்னமானார். ஹரிச்சந்திரன் ஓங்கிய வாளை வெடுக்கெனப் பிடித்தார். தர்மத்தின் மகிமை இப்படிப்பட்டது. தர்ம சீலர்களின் மகிமையும் இத்தகையதே.

தர்மம் தன்னைக் கடைப்பிடிப்போருக்கு பாது காப்பு அளித்து, வறுமையில் செழுமையும் மாளாத இன்பத்தையும் கொடுக்கிறது. இதைப் புகட்டுவதற்காக ஒரு சிறுகதை சொல்லுகிறேன்.

பஞ்சநாதம் எனும் தேசத்திலே, மூன்று வருஷங் கள் வரை ஒரே அரசர் அரசாட்சி புரிவதுண்டு. அப் பால் புதிய தேர்தல் நடைபெறவும் மக்கள் புதிய அரசனைத் தேர்ந்தெடுப்பார்கள். புது மன்னர் சிம்மாசனம் ஏறவும், பழைய மன்னரை பஞ்சநாதத் திற்குப் பக்கத்திலுள்ள ஆற்றிற்கு மேளதாள ஆர வாரத்துடன் அழைத்துச் செல்வார்கள். ஆற்றில் அம்மன்னரை மூழ்கடித்து விடுவார்கள். இது அத் தேசத்து வழக்கமாக இருந்து வந்தது. ஆனால், மன்னர் அரசாளும் மூன்று ஆண்டுகளிலே எதை வேண்டுமானாலும் செய்யவும், வாழ்க்கையைக் கூடியவரை சிறப்பாக அனுபவிக்கவும் அவருக்கு சர்வ சுதந்திரம் உண்டு.

பஞ்சேந்திரிய சுகங்களில் ஈடுபட்டு வாழப் பிரியப்படுவோரும், மூன்றுவது ஆண்டினிறுதியிலே மரணத்தைப் பற்றிய கவலை கொள்ளாதவரும் மன்னர் பதவிக்கான மாபெருந் தேர்தலில் கலந்து கொண்டனர். பல ஆண்டுகள் கடந்தன விவேகி நாதர் என்பவர் மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பட் டார், வழக்கப்படி.

ராஜா விவேகிநாதரோ மிக்க சாமர்த்தியசாலி — கடமை தவறுதவர். ''எனது அரசாட்சிக்குப் பிறகு என்னைக் காத்துக்கொள்ள வேண்டும். எனது முன்னோர்கள் ஆற்றில் மூழ்கடிக்கப்பட்டது போல், நான் அக் கதிக்கு ஆளாகக்கூடாது. இக் கடும் பரீக்ஷையிலிருந்து தப்பித்து உயிர் வாழத்தக்க வழிவகைகளைக் கண்டு பிடித்தாக வேண்டும்'' என்றெல்லாம் எண்ணமிட்டார்.

மன்னர்கள் மூன்றுவது ஆண்டினிறுதியில் மூழ் கடிக்கப்படும் நதிக்கு ஒரு நாள் மாலை நேரத்தில் ராஜா விவேகிநாதர் உல்லாசமாக ஓர் படகில் பிரயாணமானுர். நதியைக்கடந்து அக்கரைக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே விஸ்தாரமான நிலப் பரப்பு இருந்தது. நீர் வளமும் நிலவளமும் செறிந்து காணப்பட்டது. புதிய வாசஸ்தலங்களைக் கட்டுவதற்கு அந்த இடத்தை உபயோகிக்கலா மென்று அவர் கருதினுர். அரண்மனைக்கு திரும் பினுர். அந்த இடத்தில் புத்தம் புதிய ஊர் ஒன்றைச் சிருஷ்டித்தார். இதற்கு 2000 ஆட்களை அனுப்பி வைத்தார். இவர்கள் நிலத்தைப் பண் படுத்தி உழுது பயிரிட்டார்கள். சிறந்த வீடுகளைக் கட்டினுர்கள். சந்தோஷமாக வாழலானுர்கள். சகலவித வசதிகளும் அழகிய பூந்தோட்டங்களும் கூடிய மகோன்னதமான அரண்மனை ஒன்றையும் அங்கே கட்டினுர். விவேகிநாதர் இந்த விஷயத்தை மந்திரி பிரதானிகளுக்கும் தெரியப்படுத்தாமல் ரகசியமாக வைத்துக்கொண்டார். அரண்மனை கட்டிட வேலையை அவரே நேரில் பார்வையிட்டார். குடிமக்களுக்கு இதுவிஷயம் ஒன்றுமே தெரியாது.

மூன்று ஆண்டுகள் கழிந்தன. சோதனை நாள் வந்தது. எல்லா மக்களும் மன்னரை ஊர்வலமாக அழைத்துக்கொண்டு ஆற்றை நோக்கினர். அரச ருடைய முகத்தில் ஆனந்தம் கங்குகரையில்லாது

தாண்டவமாடியதை மக்கள் கண்டனர். சம்பிரதாயப்படி, மன்னரின் இடையைச் சுற்றிலும் பெருங்கற்கள் கட்டப்பட்டன. குறிப்பிட்ட இடத்தில் மன்னர் விவேகிநாதர் ஆற்று நீரில் மூழ்கடிக்கப்பட்டார். அரசர் தமது சட்டைப்பையில் கூர்மையான கத்தியொன்றை வைத்துக் கொண்டிருந்தாராதலால், கட்டுக்களையெல்லாம் நொடிப்பொழுதில் அறுத்து அவிழ்த்துக்கொண்டார். மேலும் அவர் நீந்துவதில் நல்ல பயிற்சி பெற்றிருந்தார். அதோடு, பிராணாயாமப் பயிற்சியும் அவருக்கு அபாரமாக உண்டு. கற்கள் யாவும் கீழே விழவும் தண்ணீருக்குள்ளேயே நீந்தி அக்கரைக்குப் போய்ச் சேர்ந்தார். குடிமக்கள் யாவரும் விவேகிநாதர் இறந்துவிட்டார் என்றே கருதினார்கள். அக்கரைக்குப் போனதும், இரகசியமாக வாழ்ந்து வந்த அரசரது ஆட்கள் புத்தாடை, புதிய ஆபரணங்கள் முதலிய மரியாதைகளுடன் மன்னரை வரவேற்று உபசரித்தார்கள். தாம் செய்யப்போவதைப்பற்றி ஏற்கனவே அவர்களிடத்தில் பிரஸ்தாபித்திருந்தாராதலால், அவர்கள் மன்னரை வெகு ஆவலோடு வரவேற்றார்கள். அப் புது ஊரின் பெயர் பிரஹ்மபுரி. ராஜா விவேகிநாதர் பிரஹ்மபுரிக்கு விஜயஞ் செய்தார். பல்லாண்டுகள் ஆனந்தமாக அரசாண்டு வந்தார்.

நண்பர்களே! ராஜா விவேகிநாதரைப் போன்று. நீங்கள் புத்திசாலிகளாயும் எதிர்காலத்தைப்பற்றி சிந்திக்கிறவர்களாயும் இருக்கவேண்டும். இறப்பதற்கு என்றே அவருக்குப் பட்டம் கிடைத்தது. அது அவருக்குத் தெரியும். இதிலிருந்து தப்பித்துக் கொள்ள முன்னேற்பாடுகள் செய்யலானார். நீங்களும் தர்மம், யோகாப்பியாசம், நாம சங்கீர்த்தனம் ஆகியவற்றை அனுஷ்டித்து மரணத்திலிருந்து காத்துக்கொள்ள மாட்டீர்களா? செல்வ நிலையிலிருக்கிற காலத்திலேயே எதிர்

காலத்தில் ஆனந்த வாழ்க்கை நடத்துவதற்கு அடி கோலுங்கள். அப்படிச் செய்தால்தான் நீங்கள் விவேகிகள். நூறு பங்களாக்களும் மோட்டார் களும் இதர போக சாதனங்களும் சம்பத்தும் இருந்து, பாபங்களை நினைத்து நினைத்து மரணத் தறுவாயில் கண்ணீர் விடுவீரானால், உங்கள் செல்வம் பூஜ்யமாகும். அமரத்வ குழந்தைகளே! யமனை ஒரு புன்முறுவலுடன்—கண்ணீருடன் அல்ல, சந்திக்கத் தயாரித்துக் கொள்ளுங்கள்.

## 8. 'நான்' எனும் அகங்காரத்தைக் கொல்லு

கிராமி என்பவன் கிராமவாசி; மகா ஏழை. அவன் படிப்பில்லாதவன். பெரிய பட்டணம் எதையும் அவன் பார்த்ததில்லை. பம்பாய் மாநகரத்திற்குப் போக விருப்பங் கொண்டான். அந்தக் கிராமத்திலிருந்த சஹுகார் என்னும் பெரிய வியாபாரி பம்பாயில் வாசஞ் செய்து கொண்டிருந்தார். அவருக்குப் பெரியதோர் தொழிற்சாலை இருந்தது. விற்பனைக்கடை, பங்களா, தோட்டம் ஆகியவை உண்டு. ஆனதால் கிராமி "நான் பம்பாய்க்குப் போய் சஹுகார் பங்களாவில் தங்குவேன். பெரிய தனவந்தர்— கருணை உள்ளம் படைத்தவர், பிரயாணச் சிலவுக்குக் கூட அவரே பணம் கொடுப்பார்" என்றெல்லாம் எண்ணமிடலானான். நல்ல சுபதினத்தில் பம்பாய்க்குப் புறப்பட்டான்.

இரண்டு நாள் பயணத்தின் பிறகு பம்பாய்க்குப் போய்ச் சேர்ந்தான். அது கோடைக்காலம்.

வெயில் 'அகோரமாய் அடித்தது'. சஹுகார் பங்களாவுக்குப் போவதற்குள் பல இடங்களிலும் விசாரித்தான். பங்களாவில் சஹுகாரைப் பார்த்ததும் சந்தோஷமடைந்தான். சஹுகார் இவனைத் தம் கிராமத்துவாசியென்று அடையாளந் தெரிந்து கொண்டவராய் மிகுந்த மரியாதையுடன் வரவேற்ருர். இப்படிச் செய்ததெல்லாம் கிராமியிடத்திலிருந்த அன்பின் மிகுதியால் அல்ல; எல்லாம் தமது அகம்பாவத்தை அடிப்படையாகக் கொண்டது. அந்த ஏழை மனிதன் கிராமத்திற்குத் திரும்பிப்போனுல், தாம் அவனை உபசரித்ததை பற்றித் தம்மை வெகுவாகப் புகழுவான் என்பது சஹுகாரின் கருத்து.

கிராமி மிகவும் களைப்படைந்திருந்தான். கை விசிறி ஒன்றைக் கேட்டான். அதற்கு சஹுகார் ''ஏன் அலட்டிக்கொள்கிருய்? இதோ உனக்காக மின்சார விசிரியை முடுக்குகிறேன்'' என்று இயம்பினுர். அப்படியே விசை முடுக்கப்பட்டது. கிராமி அதைப் பார்த்ததே கிடையாது. ஒரே பிரமிப்படைந்தான். சஹுகாரின் திறமையைப் பற்றியும், திரவியத்தைப் பற்றியும், அறிவைப் பற்றியும் அபாரமாய்ப் புகழலானுன். அகந்தையால் மிகவும் பூரிப்படைந்த சஹுகார், ''இதெல்லாம் பிரமாதம் இல்லை. இதைக் காட்டிலும் பன்மடங்கு அரிய செயல்களைச் செய்வேன். போகப்போக நீ தெரிந்துகொள்வாய்'' என்று கூறினுர்.

அன்றிரவு வந்தது. விளக்கு வேண்டும் என்ருன் கிராமி. மீண்டும் சஹுகார் ''விளக்கைப் பற்றிக் கவலைப்படாதே. மின்சார விளக்கு எரியும். இதோ பார்!'' என்று கூறிக்கொண்டே மின்சார விளக்கின் விசையை அழுத்தினுர். அங்கே கண்ணைக்

கவரும் பிரகாசம் எங்கும் பரவியது. பாவம்! கிராமிக்கோ ஒரே வியப்பாக இருந்தது. சஹுகாரரை ஆகாயமளவு புகழ்ந்தான். அவரது அகம்பாவம் இன்னும் அதிகரித்தது. இரவு 8—30 மணிக்கு சஹுகார் வானொலிக் கருவியை முடுக்கி விட்டார். புதிய இங்கிதமான இசைக் கீர்த்தனை யும், இந்தியாவிலும் உலகத்திலும் நிகழுகின்ற முக்கிய செய்திகளையும் வாரி வழங்கலாயிற்று. இந்த அதிசயத்தைப் பற்றி கிராமி கனவில்கூட நினைத்ததே கிடையாது. இப்போது கிராமி தன்னைமீறிப் பொங்கி எழுந்த உணர்ச்சிகளின் வேகத்தால், சஹுகாரின் நிபுணத்தன்மையைப் பாராட்டிப் புகழ்ந்தான். காற்றினால் நிறைந்து உப்பிப்போன கால்பந்து போன்று, நான் என்ற அகங்காரத்தால் சஹுகார் இறுமாந்தார். அவர் ''இதைச் செய்வேன், அதைச் செய்வேன், எவ்வளவு சக்திமான் நான் என்பதைத் தெரிந்து கொள்'' என்றெல்லாம் அளந்து கொண்டே போனார்.

திடீரென மின்சார சக்தி நின்று விட்டது. விளக்குகள் எரியவில்லை; விசிறிகள் சுழலவில்லை; வானொலிக் கருவியும் நின்றது. கிராமி ஏமாற்ற மடைந்தான். உடனே அவன் ''சேட்ஜீ! இப்படி ஏன் செய்தீர்கள்?'' என்று கூவினான். சஹுகார் ''மின்சார சக்தி நின்று விட்டது. அதனால் எல்லாம் நின்று விட்டன'' என்று கூறி அவமானமடைந்து நின்றார். கிராமி, ''அதிருக்கட்டும். விளக்குகள் எரியாமலிருக்கட்டும்—விசிறிகளை சுழலச் செய்யுங் கள்'' என்றான். சஹுகார் ''இல்லை, அது முடியாது''. எனவே, கிராமி, ''வானொலிக் கருவியாவது பாடட்டுமே'' என்றான். அதற்கு சஹுகார், ''உனக்கு மின்சக்தி இன்னது என்று தெரியாது. அச் சக்தியில்லாமல் எதுவும் இயங்

காது'' என்ற உண்மையை உரைத்தார். கிராமி ''நான் இதைச் செய்வேன், நான் அதைச் செய்வேன், நான் சக்திமான்—என்றெல்லாம் இப்போது சொல்லிக்கொண்டிருந்தீரே—அந்த சக்தி எங்கே? 'நான்' என்பதும் எங்கே? நான் எனும் அந்த சக்தியைப் பிரயோகித்து விளக்கையாவது எரியச் செய்யுங்கள்'' என்று கேட்டான். சஹாகார் தமது தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு எதுவும் பதிலளிக்காமல் நின்றார்.

இத்தகைய நிலைதான் நமக்கெல்லாம். நான் எனும் அகந்தையில் மூடப்பெற்று, ''நான் இதைச் செய்தேன், நான் இதைச் செய்யக்கூடும். நான் செய்வேன்'' என்றெல்லாம் சொல்லுகிறோம். நமது இந்திரியங்களை இயக்கும் சக்தியை நாம் உணர்ந்து கொள்ளவில்லை. அந்த சக்தியில்லாமல் எதையும் நாம் செய்ய இயலாது. அந்தச் சக்தி போய்விட்டால், இங்கிதமான உணவுகளினால் போஷித்துக் கவனமாகப் பாதுகாக்கப் பெற்ற இந்த தேகம் எரித்து சாம்பலாக்கப்படும், புதைக்கப்படும் அல்லது நீரில் எறியப்படும். இத்தேகத்தைப்பற்றி நாம் கொள்ளும் அகம்பாவம் எங்கே போயிற்று? ஆனதால், ஞானத்தைக் கைக்கொள்ளுங்கள். உங்களுடைய புத்தி தீக்ஷண்யத்தைப் பற்றியும் அகந்தை கொள்ளாதீர்கள். உங்களுடைய ஆத்மாவை சாக்ஷாத்கரியுங்கள். நம்மைக் கடவுள் ஆசீர்வதிப்பாராக! குருதேவரின் திருவருளால், நாமெல்லோரும் ஆத்மாவைச் சாக்ஷாத்கரிப்போமாக.

ஓம் தத் ஸத்.

# 9. மாயையைக் கடக்கும் மார்க்கம்

ஆற்றோரத்திலே இரண்டு நண்பர்கள் நடந்து போய்க்கொண்டிருந்தார்கள். மழைக்காலம், ஆற்றில் வெள்ளம் போய்க்கொண்டிருந்தது. கறுத்ததோர் கரடி வெள்ளத்தில் இழுத்துச் செல்லப்பட்டது. அக்கரடி கம்பளம் ஒன்று மிதப்பதுபோன்று தோன்றியது. இரண்டு நண்பர்களும் அதைக் கைப்பற்ற வேண்டுமென்ற ஆசையால் தூண்டப்பட்டார்கள்.

ஆசை எப்போதும் ஒருவனை அல்லல்களுக்கும் கவலைகளுக்கும் ஆளாக்குகிறது. ஸ்ரீ சீதா தேவியும்கூட, மாயா பொன்மானின் கவர்ச்சியினால் உள்ளங்கவரப்பெற்றவளாய், பல இடுக்கண்களுக்கு உள்ளாக நேரிட்டது.

ஒருவன் கரையில் நிற்க, மற்றவன் ஆற்றில் குதித்து ''கம்பளம்'' என்று கருதிய கரடியைக் கைப்பற்றினான். கரடி நீரில் மூழ்கிக்கொண்டிருந்தது. அக்கணமே மனிதனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. கம்பளத்தைக் கரைக்கு இழுத்துச் செல்லுவதற்குச் சாத்தியமில்லாமற் போகவே அவன் கரடியின் பிடியினின்று விடுவித்துக்கொள்ள மகா பிரயாசைப்பட்டான்; ஆனால் கரடி விடுவதாயில்லை. முயற்சிகள் எல்லாம் வீணாயின. கரையிலிருந்தவன் கரடியைக் கம்பளி என்று இன்னமும் கருதிக்கொண்டிருந்ததால், ''நண்பா! கம்பளியை விட்டுவிடு. வா, கம்பளத்தின் பொருட்டு உன்னுடைய உயிரை இழக்க விரும்புகிறாயா?'' என்று கத்தினான். ஆற்றில் குதித்தவன், ''கம்பளியை விட்டுவிட ஆசைப்படுகிறேன். ஆனால் அந்தக்

கம்பளியோ என்னை விட்டுவிடத் தயாராக இல்லை. என்னை அது கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது'' என்று பதில் கூறினான். இங்ஙனம், கம்பளி போலத் தோன்றிய கரடியால் தாக்கப்பெற்ற பேராசைக்காரன் ஆற்றின் அடியிலே போய் விட்டான்.

மாயையின் பிடிகளில் சிக்கித் தத்தளிக்கும் நமக்கெல்லாம் இது பொருந்துகிறது. முதலில் ஆனந்தமும் இந்திரிய சுகங்களும் நிறைந்ததாய் மாயை இருக்குமென்று கருதி அதைப் பின்பற்ற ஓடுகிறோம். கடைசியில் மாயையின் உண்மையான சொரூபத்தை உணருகிறோம். மாயை தொந்தரவு அளிப்பதாயும், மாயமாயிருப்பதாயும், சதா மாறிக் கொண்டிருக்கிறதாயும் அறிந்த பிறகு, மாயையை ஒழித்துக்கட்ட விரும்புகிறோம். அப்பால் அவள் (மாயை) நம்மை விடமாட்டாள். இரும்புப் பிடியால் அவள் நம்மை இறுகப் பிடித்துக்கொண்டு விட்டாள். ஆகையால், நாம் ஜனன மரணச் சக்கரத்திலே சுழன்றுகொண்டிருக்கிறோம்.

நாமெல்லோரும், தைரியம் வாய்ந்த சுறுசுறுப்பான உண்மையான முமுக்ஷுக்களாக இருக்க வேண்டும். அப்படியிருந்தால் மாத்திரமே, மாயையினின்று விடுதலை பெறக்கூடும். நம் மீது இறங்குவதற்குத் தயாராய் இருக்கும் கடவுளின் திருவருளினால் விடுதலை பெறக்கூடும். உதவி வேண்டுமென உரக்கக் கத்துங்கள் — அந்தக்கணமே உதவியை நீங்கள் பெறுவீர்கள். அக் கூக்குரல் உங்களுடைய ஹிருதயத்தின் மூலஸ்தானத்திலிருந்து வெளிப்பட வேண்டும். மாயையை ஒழித்துக்கட்ட வேண்டுமென்கிற உண்மையான தாகத்திலிருந்து வெளிப்பட வேண்டும். இன்னமும் நாம் மாயையோடு ஒட்டிக் கிடக்கிறோம். உதடு வரை உள்ள வைராக்கியமே

நாம் கொள்ளுகிறேம் — பிறர் நம்மைப் பெரிய பக்தர்கள் என்று கருதும்படி செய்வதற்காக நம் முடைய ஒரே குறிக்கோள் பேரும், புகழும், பணமும் பெறுவதற்கே உருவாகியுள்ளது. ஸ்ரீமத் பகவத் கீதையில், ஏழாவது அதிகாரத்தில் 14-வது ஸ்லோ கத்திலே இக்கருத்தைக் கிருஷ்ண பரமாத்மா தெளிவுபடுத்துகிறுர். ''இந்த மாயையைக் கடப்பது மகா கஷ்டம். என்னைச் சரணமடைந்த பக்தர்கள், என்னைச் சதா ஸ்மரித்துக்கொண்டே வழிபடுகிறுர் கள், மாயையைக் கடந்து அப்பால் செல்வார்கள்'' என்பதே அந்த ஸ்லோகத்தின் உட்பொருள். மேலும் மாயையைக் கடப்பதற்கு இரண்டு வழிகள் கூறப்படுகின்றன:- ஞானம், பக்தி இரண்டுக்கும் தன்னலமற்ற சேவை (கர்மம்) தேவை. எல்லோரைக் காட்டிலும் கெட்டவன் ஒருவன் கூட இந்தக் குறிக் கோளைப் பெறலாம்—(ஞானம் ஓர் கடின மார்க்கம்) பக்தி சாதிப்பதற்குச் சுலபமானது. (கீதை VIII-14ம் XII-6 &,7) பக்தன் எனச் சொல்லிக் கொள்வதற்கு அவமானப்படலாகாது. ஞானத்திற்கு எவ்விதத் திலும் அது கீழ்த்தரமானதென்று அவன் கருதலா காது. மேலான ஞானம் என்பதும் பராபக்தி என்பதும் ஒன்றே. கீதை XI-48, 53-ல் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே இதைக் கூறியுள்ளார்.

பக்தியில்கூட இரண்டு விதம்:- நிராகார பக்தி, சாகர் பக்தி. இரண்டாவது பெரும்பான்மை யோர்க்கு ஏற்றது. எனவே நாமெல்லோரும் சாகர் பக்தியைக் கடைப்பிடிக்க வேண்டும். கீர்த்தனம் பாடுதல், கடவுளைச் சதா தியானித்தல், இறைவன் நாமத்தைச் சொல்லுதல்—இவைகளே சாகர் பக்தி. இந்த மாயையை ஒழித்துக்கட்டுவதற்கு நாம் பெரிதும் பாடுபடவேண்டும். தீவிர சாதனை செய்ய வேண்டும்.

# 10. கந்தர்வசேனன்

சாதாரணமாக அரிசி வாங்க வேண்டுமானல் மிகப் புத்திசாலித்தனமாக நல்ல, தரமான அரிசியைக் கடையில் பார்த்து வாங்குகிறீர்கள். வாழ்க்கைக்குத் தேவையான சாதாரணமான ஒரு பொருளுக்கு இவ்வளவு கவனம் செலுத்தும் நீங்கள் தர்மத்தை நிலை நாட்ட எவ்வளவு விழிப்பாக இருக்க வேண்டும். அதிக விலை கொடுத்து மூன்ரும் தரமான அரிசியை வாங்கிவிட்டால் எவ்வளவு வருந்துகிறீர்கள். தவறை உணர்கிறீர்கள். அது போல உண்மையாக உய்த்துணரும் தன்மையில் குற்றம் இருந்தால் பின்னல் வருந்துவீர்கள்.

ஒரு தேசத்தில் ஒரு சலவைத் தொழிலாளி இருந்தான். அவனிடம் ஒரு கழுதை இருந்தது. அதை அவன் மிகவும் நேசித்தான். கந்தர்வ சேனன் என்று அதற்குப் பெயரிட்டான். ஒரு நாள் காலை இந்தக் கழுதை இறந்துவிட்டது. சலவைத் தொழிலாளி துக்கத்தில் மூழ்கிவிட்டான். உணவை மறந்தான். துணி வெளுப்பதையும் மறந்தான். இவன் நலன் கருதும் வாடிக்கையாளர் ஒருவர் இவனது கவலைக்குக் காரணம் கேட்டார். சலவைத் தொழிலாளி குலுங்கிக் குலுங்கி அழுதான். இவனது துக்கத்துக்கான காரணத்தை அறிய முடியாத வாடிக்கையாளர் மிக வற்புறுத்திக் கேட்டதும் கந்தர்வசேனன் இறந்துவிட்டதாகச் சலவைத் தொழிலாளி கூறினன். கந்தர்வசேனன் யார் எனக் கேட்டதும் மீண்டும் அழத் தொடங்கினன். கந்தர்வசேனன் ஒரு வேளை பெரிய மனிதராயிருக்கலாம் எனக் கருதி வாடிக்கையாளர் சலவைத் தொழிலாளியுடன் துக்கத்தைப் பகிர்ந்து கொள்ள, தலையை மொட்டையடித்துக் கொண்டு,

மீசையை எடுத்துவிட்டுக் கறுப்பு ஆடை உடுத்திக் கொண்டார். கந்தர்வசேனன் இறந்த சேதி கொடிய நெருப்பைப்போல் பரவி ஒவ்வொருவரும் இந்தப் பெயரைக் கேட்டதும் பெரிதாக எண்ணி நகரில் உள்ள எல்லோருமே மொட்டையடித்துக் கொண்டு துக்கம் அனுஷ்டிக்கும் வகையில் கறுப்பு ஆடைகளை உடுத்திக் கொண்டனர். ஒரே நாளில் நகரம் முழுவதும் துக்கத்தில் ஆழ்ந்துவிட்ட தோற்றம் பெற்றுவிட்டது. மந்திரி நகரின் நிலையைப் பார்த்து மக்களிடம் விஷயம் என்ன எனக் கேட்க, கந்தர்வசேனன் இறந்துவிட்டார் என்றனர். மக்களின் துயரத்தில் பங்கு கொள்ள மந்திரி கருதினார். அரசனுக்குச் செய்தி எட்ட, அவரும் துக்கம் அனுஷ்டிக்கத் தொடங்கினார். அன்றிரவு அந்தப்புரத்துக்கு அரசர் சென்றதும் அரசியார் அரசரின் துக்கத்துக்குக் காரணம் கேட்டார். அரசர் விவரம் சொன்னதும் ''கந்தர்வசேனன் உங்களது தந்தையா? தாயா? எதற்காக மொட்டையடித்துக் கொண்டீர்கள்? கந்தர்வ சேனன் யார்?'' என்று அரசியார் கேட்க, அரசன் அப்போதுதான் உணர்ந்தவனாகி மந்திரியை அழைத்துக்கேட்டான். மந்திரியால் பதில் சொல்ல முடியவில்லை. பிறகு மக்களை அழைத்துக் கேட்க, அவர்களுக்கும் தெரியவில்லை. ஆகவே சலவைத் தொழிலாளி அழைக்கப்பட்டான். கந்தர்வசேனன் யார் என்று மிகவும் வலியுறுத்திக் கேட்டபின் அது தன் கழுதைதான் என்று பதில் சொல்லவே மன்னன் அவமானத்தால் தலைகுனிந்தான். மக்களும் தலைகுனிந்தனர்.

சந்திக்கும் ஒவ்வொருவரையும் பார்த்துக் கண்மூடித்தனமாகவும், முட்டாள்தனமாகவும் பின்பற்ற வேண்டாம். ஒவ்வொரு செயலையும் மேற்கொள்வதற்குமுன் பகுத்தறிவைப் பயன்

படுத்துங்கள். தர்மம் நுட்பமானது. அதன் உண்மையான சிறப்பை எளிதாக உணர முடியாது. ஒருவருடைய கற்பிதமான உளறல்களையோ, மனம் போனபோக்கில் செய்யும் செயலையோ அவசரப் பட்டுப் பின்பற்ற வேண்டாம். உங்களுடைய விவேகத்தைப் பயன்படுத்திச் சிறுமையை நீக்குங்கள்.

உங்களது குருநாதரது திருவடிகளில் அமர்ந்து அல்லது யோகிகளுடன் சேர்ந்து சரியான வழியைத் தேர்ந்தெடுங்கள்.

# 11. அறிவு தரும் சக்திகள்

கதைகளில் ஏதோ ஒரு தனிப்பட்ட கவர்ச்சி இருக்கிறது. நீதிகளுடன் அறிவைத் தூண்டிவிடும் கதைகளைக் கேட்கும்போது மனம் உயருகிறது. ஒரு நல்ல கதையைக் கேட்க விரும்பாத மனிதனோ, ஸ்திரீயோ, குழந்தையோ உண்டா? பஞ்சதந்திரம், மகாபாரதம், கீதோபதேசம் மற்றும் புராணங் களில் அற்புதமான கதைகள் உள்ளன. இந்து சமயம் சார்ந்த முனிவர்களும், சந்நியாசிகளும், யோகிகளும் தத்துவங்களைக் கதைகள், சிறு வரலாறுகள் மற்றும் நீதிக் கதைகள் மூலமாகக் கற்பித்துள்ளார்கள். ஆன்மீக நெறிகளை எடுத்துச் சொல்லக் கதைகளைச் சாதனமாகக் கொண்டார்கள்.

ஒரு சொற்பொழிவாளரோ, பாகவதரோ, கதாகாலட்சேபக்காரரோ தம் கருத்தை வலி யுறுத்தக் கதைகளைப் புகுத்தினால்தான் அவர்களது பிரசங்கம் சுவையும், கவர்ச்சியும் உடையதாக அமையும். மக்களும் கவனமாகக் கேட்பார்கள். அறிவு புகட்டும் கதைகளோடு சொல்லப்படும் போது செய்திகள் மனதில் அழிக்க முடியாதபடி பதிந்துவிடுகின்றன. உபநிஷதங்களிலும் கதைகள் உள்ளன. உத்தாலகன், சுவேதகேது, நசிகேதர்கள், யமன், உமாதேவி, இந்திரன், பிருகு முனிவர், வருணன், மைத்ரேயி, யக்ஞவல்லியர், கௌதமர், சத்யகாம ஜபலா ஆகியவர்கள் பற்றி நீங்கள் நன்கு அறிவீர்கள். மிக உயர்ந்த வேதாந்தக் கருத்துக்கள் கதைகள் வடிவத்தில் சுருக்கமாகச் சொல்லப் பட்டுள்ளன.

தற்காலத்தில் தங்களைப் பகுத்தறிவாளர் என்று சொல்லிக்கொள்கிறவர்கள் இக்கதைகளை வெறுக்கிறார்கள். கட்டுக்கதைகள் என்றும், பித்தலாட்டம் என்றும் சொல்லி ஒதுக்குகிறார்கள். விஞ்ஞானபூர்வமான ஆதாரம் கேட்கிறார்கள். ஒரு விஞ்ஞானக் கண்டுபிடிப்புக் கூட மற்றவர்க்கு விளக்கப்படும்போது கதை வடிவம் பெறுகிறது.

ஒரு குழந்தைக்குக் கதைகளைக் காட்டிலும் உற்சாகம் தருபவை வேறு எதுவும் இல்லை. அது போல ஆன்மீகத்தை நாடும் குழந்தைக்கு நீதி மற்றும் தெய்வீகக் கதைகள், அதன் ஆன்மீக அறிவுப் பசியையும், தாகத்தையும் தணிக்கும் அமுதத் துளிகளாகும்.

# 12. ஒரு சாதகரின் கதை

கங்கைக் கரையில் உள்ள அலகாபாத் என்னும் ஊரில் சாது கோவிந்தராம் அவர்களின் சீடன் இராமகிருஷ்ணன் என்பவன் வசித்து வந்தான். அவன் பரம சாது. பிராணயாமத்தையும், யோகக் கிரியைகளையும் சாதனை செய்து வந்தான். இராமநாமத்தை ஐம்பதாயிரம் முறை ஜபிப்பான். ஏகாதசியன்று முழு விரதம் இருப்பான். ஏகாதசி அன்று தண்ணீர் கூட அருந்தமாட்டான். சந்தி ராயண மற்றும் கிரிச்ர விரதங்கள் நான்கு முறை இருப்பான். கீதை முழுவதையும் மனனம் செய் திருந்தான். சில சமயம் கீதை, உபநிஷதம் மற்றும் பாகவதச் சொற்பொழிவுகள் செய்வான்.

ஆனால் அவனிடம் மிகப் பெரிய குறை ஒன்று இருந்தது. சூடான பக்கோடா சாப்பிடுவதில் அவனுக்கு எப்போதும் விருப்பம் அதிகம்.

ஒரு நாள் அவன் நகரத்துக்குச் சென்று சூடாக பக்கோடாக்கள் வாங்கிக் கொண்டு ஆசிரமத்துக்குத் திரும்பித் தன் அறையின் கதவைத் தாழிட்டுக் கொண்டு பக்கோடாவைச் சுவைக்கத் தொடங்கி னான். சில துண்டுகள் தின்றிருப்பான். யாரோ கதவைத் தட்டினார்கள். வாயைத் துடைத்துக் கொண்டு பக்கோடாக்களை ஒரு பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டுக் கதவைத் திறந்தான். இவனோடு படிக்கும் சீடன் ஒருவன் வேதாந்தம் தொடர்பான புத்தகம் ஒன்றை வாங்கிச் செல்ல வந்திருந்தான். புத்தகத்தைத் தந்து அவனை அனுப்பிவிட்டு அறையை மூடிக் கொண்டு பக்கோ டாக்களைத் தின்னத் தொடங்கியபோது மறுபடியும் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. முன்போலவே பக்கோடாக்களைப் பத்திரப்படுத்திவிட்டுக் கதவைத்

திறந்தான். பதஞ்சலி சூத்திரத்தில் சந்தேகங் களைத் தெரிந்து கொண்டு போக நண்பன் ஒருவன் வந்திருந்தான். பக்கோடாக்கள் ஆறிப் போய் விடுமே என்று இராமகிருஷ்ணனுக்கு நிலைகொள்ள வில்லை. சூடாகச் சாப்பிட முடியவில்லை என்றாலும் சில நிமிஷங்கள் நண்பனிடம் பேசி, சீக்கிரத்தில் அனுப்ப முயன்றான்.

மறுபடியும் கதவைத் தாழிட்டுவிட்டு, பெட்டி யைத் திறந்து ஆவலோடு பக்கோடா தின்னத் தொடங்கினான். மீண்டும் கதவு தட்டப்பட்டது. இராமகிருஷ்ணன் நிலைகுலைந்து போனான். அவனால் மனநிறைவோடு சுவையான பக்கோடாக் களைத் தின்ன முடியவில்லை. அவற்றைப் பத்திர மாகப் பெட்டியில் வைக்கவும், பின்பக்கக் கதவைத் தாழிடவும் மறந்து அப்படியே வைத்துவிட்டு வந்து கதவைத் திறந்தான். யாத்ரீகர் ஒருவர் ஆடைகள் வழங்க வந்திருந்தார். இராமகிருஷ்ணன் அவரிடம் பேசிக்கொண்டிருந்த போது பின்பக்கம் சில குரங்குகள் வந்து பக்கோடாக்கள் முழுவதையும் எடுத்துச் சென்றுவிட்டன. இராமகிருஷ்ணன் யாத்ரீகரிடமிருந்து துணியைப் பெற்றுக்கொண்டு பக்கோடா தின்னும் ஆவலில் உள்ளே வந்தான். எந்த இடையூறும் இல்லாமல் சாப்பிடலாம் என்று நினைத்தான். ஆனால் குரங்குகள் பக்கோடாக்கள் எல்லாவற்றையும் எடுத்துச் சென்று விட்டதைக் கண்டு பெருத்த ஏமாற்றம் அடைந்தான். மனங் கலங்கினான்.

இராமகிருஷ்ணன் சந்தேகமில்லாமல் நல்ல சாதுதான். பெரிய யோகாப்பியாசியும், சொற் பொழிவாளரும்தான். ஆனால் அவனிடம் ஆசிர மத்தில் தன்னுடன் வசிக்கும் தன் சகோதரர் களுக்குக்கூடக் கொடுக்காமல், கதவைத் தாழிட்டுக் கொண்டு பக்கோடா தின்னும் இந்தத் தீய பழக்கம்

இருந்தது. அவனது மனம் சிறியது, குறுகியது. அறிவை வளர்த்துக் கொண்டானே தவிர மனத்தை வளர்த்துக்கொள்ளவில்லை. அதனுல்தான் சொற் பொழிவின் போதும், பிறரிடம் பேசும் போதும் தன் கருத்தை வலியுறுத்திச் சொல்ல முடியாமற் போயிற்று. அவனுக்கு மன வளர்ச்சி இல்லை. யோக சாதனைகளின் உண்மையான வளர்ச்சியும் அவனுக்கில்லை.

பரிசுத்தமான மனம் மோட்ச சாம்ராஜ்யத் துக்குள் நுழைவதற்கான அனுமதிச் சீட்டு ஆகும். நீங்கள் வஜ்ரோலி முத்திரையைப் பயில்வதன் மூலம் எட்டு அவுன்ஸ் பாதரசத்தைச் சுருக்கலாம். சமஸ்கிருதத்தில் லயமாகப் பேசலாம். கீதை முழுவதையுமோ அல்லது பிரம்ம சூத்திரத்தையோ அப்படியே ஒப்பித்துக் கேட்பவர்களை வியக்கச் செய்யலாம். கேசரி முத்திரைப் பயிற்சி மூலம் மூன்று நாட்களுக்கு மூச்சையடக்கிப் பூமிக்கடியில் சமாதியடையலாம். ஆனுல் மாசில்லாத பரிசுத்த மான மனம் இல்லை என்ருல் நீங்கள் ஒன்று மில்லாதவரே.

இராமகிருஷ்ணன் இப்படிச் செய்திருக்கலாம். பக்கோடாக்களை வாங்கி வந்ததும் தான் சாப்பிடும் முன் உடன் வசிப்பவர்களுக்கும் தந்திருக்க வேண்டும். கதவை மூடிக்கொண்டு, மனம் குறு குறுக்க, ஒவ்வொரு முறை கதவு தட்டப்பட்ட போதும் அமைதியின்றி, நிம்மதியின்றித் தனியே சாப்பிடவேண்டிய அவசியமில்லை. குரங்குகளும் பக்கோடாக்களை எடுத்துச் சென்றிரு. மனம் சங்கடப்பட்டதால் பின் கதவைத் தாழிட மறந் தான். இரகசியமாக எதைச் செய்தாலும் அது பாவமாகும். எல்லோருடனும் சேர்ந்து சாப்பிடும் மனம் இவனுக்கு இல்லை. காரணம் இவனுக்குக் குறுகிய மனம்.

பகுத்தறியும் தன்மையால் புலனடக்கம் ஏற்படவேண்டும். மாறுபட்ட சூழ்நிலைகளில் உந்தப்படும் போது மனம் அற்ப விஷயங்களை இரகசியமாக நாடுகிறது. எனவே துறவு, அறிவு பூர்வமாக அமைய வேண்டும்.

சிறிதளவு பக்கோடாக்களை மற்றவர்க்கும் தந்து தானும் சாப்பிடலாம் என்கிற சமநோக்கும், சமமாக மதித்தலும், சமமாக நடத்தும் தன்மையும் இல்லாதபோது 'அகம் பிரம்மாஸ்மி' என்று சொல்லிக்கொண்டு பிரசங்கம் செய்வதாலும், பிரம்ம சூத்திரம், உபநிஷதங்கள், யோக வாசிஷ்டம் போன்றவற்றைப் படிப்பதாலும் என்ன பயன்? ஒவ்வொன்றையும் மற்றவர்களோடு பகிர்ந்துகொள்ளாமல் தான் மட்டும் சாப்பிட வேண்டும் என்று எண்ணினுல் ஒற்றுமை எப்படி ஏற்படும்? ஆன்மாவோடு எப்படி ஒன்ற முடியும்?

மற்றவர்களது சொற்பொழிவுகளைக் கேட்டு அல்லது யோகக்கிரியைகளைக் கண்டு நீங்கள் ஏமாந்து விடக்கூடாது. பாதரசத்தை இரசாயன மாற்றம் மூலம் சுருக்குவது ஒரு மெல்லிய கயிற்றின் மேல் கழைக்கூத்தாடி நடப்பதைப் போன்றதே. சாதாரணப் பயிற்சிகள் சில மாதங்கள் செய்வதன் மூலம் இதை நீங்கள் பெறமுடியும். ஆன்ம வளர்ச்சி பெறுவது அல்லது பெருந்தன்மையை வளர்த்துக் கொள்வது யோக கிரியைகளைச் செய்வதைக் காட்டிலும் கடினமானது.

இராமகிருஷ்ணனைப் போன்ற பலர் சாதுக்கள் மத்தியிலும், இல்லறத்தாரிடையேயும் நிறைந்திருக்கிறுர்கள்.

பெருந்தன்மையையும், கண்ணியத்தையும் கடைப்பிடித்து எல்லாவகைச் சிறுமைகளையும் அகற்றுங்கள். வேதாந்தியாயிருங்கள். உங்களிடம்

உள்ளவற்றை மனப்பூர்வமாக மற்றவர்க்கும் பகிர்ந்தளித்து மகிழ்ச்சியடையுங்கள். தான்மட்டும் உண்பவன் பெரிய பாவியாவான். கீதை ''மற்றவர் உண்டபின் மீதமிருப்பதைச் சாப்பிடும் புனிதன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடு கிறான். உணவைத் தனக்காக மட்டும் சமைக்கும் பாவி பாவத்தையே உண்கிறான்'' என்கிறது.

இக்கதையில் இன்னொரு நீதியும் உண்டு. அறியாமையுடையவன் புலன் இன்பத்துக்கான செயல்களில் ஈடுபட்டுக் கடவுளை மறக்கிறான். அவன் அவற்றிலேயே மூழ்கி, இறப்பு உண்டு என்பதையும், ஒரு நாள் தானும் சுற்றத்தாரையும், நண்பர்களையும் விட்டுவிட்டு இறப்பாகிய பலி பீடத்தின்முன் நிற்க வேண்டும் என்பதையும் மறந்துவிடுகிறான். இந்தக் கதையில் வரும் குரங்கு தான், மனிதனுக்குச் சிறிதுகூட அவகாசம் கொடுக் காமல் அவன் பொருள்களை திடீரென்று அபகரிக்கும் மரணமாகும்.

நீங்கள் அனைவரும் குறுகிய மாயைகளி லிருந்தும், விரும்பத்தகாத பண்புகளிலிருந்தும் விடுபடுவீர்களாக! உங்கள் எல்லோருக்கும் மேலான பண்புகள் வந்து சேர்வதாக! நீங்கள் உண்மையான வேதாந்திகளாக ஆவீர்களாக! உங்களிடம் உள்ளவற்றைப் பிறரோடு பகிர்ந்து கொண்டு ஒற்றுமையை உருவாக்குவீர்களாக! எல்லா உயிர்களிடத்தும் உள்ள ஒற்றுமையை உணர்வீர்களாக! எல்லா உயிர்களுக்கும் மூலமாக இருப்பது புலனறிவு என்பதை அறிவீர்களாக!

# 13. சுகேசனின் தீவிர பக்தி வைராக்யம்

மகத தேசத்தில் முற்காலத்தில் சுகேசன் எனும் பிராஹ்மணன் வசித்து வந்தான். தீவிர பக்தியும் சிரத்தையும் கொண்டவன். சகல சாஸ்திரங்களையும் ஆராய்ந்தவன். நான்கு வேதங்களையும் கற்றுத் தெளிந்தவன். பெரும்பாலும் தன் பொழுதைப் பிரார்த்தனையிலும் தியானத்திலும் போக்குவான். உஞ்சவ்ருத்தியினால் அவன் தன் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தான். யாசகம் எடுத்துப் பிழைத்தல் அல்லது வயல்களிலும் சாலை ஓரங்களிலும் சிந்திக்கிடக்கும் தானியங்களைப் பொறுக்கிக்கொண்டுபோய் வேகவைத்துப் புசித்தல் — இந்த ஜீவனத்திற்கு உஞ்சவ்ருத்தி என்று பெயர்.

வருடங்கள் கழிந்தன. அவனுடைய மனைவி கருவுற்றாள். பிராஹ்மணன் தனது அனுஷ்டானங்களை கவனித்து வந்தானேயன்றி வீட்டுக் காரியங்களைப்பற்றிய சிந்தனையே கொள்ளவில்லை. அவனுடைய ஆத்மீய முன்னேற்றத்திற்கு உற்ற துணையாய் இருந்தாள் அவனுடைய மனைவி. அவள்கூட தூய உள்ளத்தோடு இறைவனை வழிபடுவாள். பிரசவ காலம் நெருங்கும்போது, தன் கணவனைப் பார்த்து, "நாதா! சில நாட்களில் பிரசவம் ஆகும். பிள்ளைப்பேற்றுக்கு வேண்டிய பொருள்களைத் தாங்கள் சேகரித்துவைக்கவில்லை. இதைப் பற்றி எத்தனையோ தடவை தங்களிடம் சொல்லி இருக்கிறேன். வீட்டில் தனித்து இருக்கிறேன். பிரசவத்திற்குத் துணை யாரும் இல்லை. பகவத் தியானத்திலே தாங்கள் சதா மூழ்கிக் கிடக்கிறீர்கள். எனக்குச் சிசுருஷை செய்யுமாறு தங்களைக்

கட்டாயப்படுத்துவதோ மகா கஷ்டம். ஆகையால் என்னை என் தாயார் வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போய் விட்டுவிட்டால், அங்கே தாயும் சகோதரியும் பக்குவமாய்த் தொண்டு புரிவார்கள். இரண்டு மூன்று மாதங்களில் திரும்புகிறேன்'' என்று கூறினாள்.

மனைவியின் அபிப்பிராயத்தை ஏற்றுக் கொண்டான். சுகேசன் அவளை அழைத்துக்கொண்டு மாமனார் வீட்டுக்குப் பிரயாணமானான். நெடுந் தூரம் நடக்க வேண்டும். அநேக மலைகளையும், பள்ளத்தாக்குகளையும், துஷ்ட மிருகங்கள் நிறைந்த காடுகளையும் கடக்கவேண்டும். பாதிவழி போயிருப் பார்கள். சுகேசனின் மனைவி களைத்துப்போனாள். ஓர் ஆலமரத்தினடியில் தம்பதிகள் தங்கி இளைப் பாறினார்கள்.

ஒரு மணி நேரத்தில், அழகான ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தாள். பிரசவ வேதனைப் பொறுக்க முடியாமல் அவள் இயற்கை எய்தினாள். ஏழை பிராஹ்மணன் குழந்தையை மடிமேல் வைத்துக்கொண்டு அழுதான். இன்னது செய்வ தென்று தோன்றாமல் திகைத்தான். அவன் தன் மனைவியின் சடலத்தைத் தகனம் பண்ண வேண்டும். குழந்தையை பாலூட்டி வளர்க்கவேண்டும். ஒரே காலத்தில் இரண்டையும் செய்வது சிரமம். பச்சிளங் குழந்தையைக் கையில் தூக்கிக்கொண்டிருந்தால், சுள்ளிகளைப் பொறுக்கிக்கொண்டு வர முடியாது. ஆகையால் கருணைக் கடலாகிய கடவுளின் பாது காப்பிற்கே அக்குழந்தையை அந்த அத்துவானக் காட்டில் விட்டுவிட்டுப் போகத் தீர்மானித்தான். தன் தொடையை நகத்தால் கீறி, பீறிட்டுவரும் ரத்தத்தால் ஓர் இலையில் ஓர் ஸ்லோகத்தை ஸம்ஸ்கிருதத்தில் எழுதினான். அந்த ஸ்லோகத்தின்

கருத்து:- ''தூய புனிதமான வெண்மை நிறத்தை அன்னப்பட்சிகளுக்குக் கொடுத்தவரும், கிளிகளை ஆழ்ந்த பச்சை வர்ணத்தால் அலங்கரித்தவரும், மயிலை கவர்ச்சி பொருந்திய வர்ணத்தால் அழகு படுத்தியவரும் எவரோ அவர், குழந்தையே! உன்னைப் பாதுகாத்துவருவார்'' என்பது.

சுகேசன் அந்த இலையைக் குழந்தையின் தலைக் கடியில் வைத்துவிட்டு, விறகுகளைச் சேகரிக்கப் புறப்பட்டான். அடர்ந்த காட்டில் அலைந்தான். தகனத்திற்குத் தேவையான காய்ந்த சுள்ளிகள் கிடைக்கவில்லை. நெடுந்தூரம் சுற்றினான். ஓர் ஏரி தென்பட்டது. மத்தியான வேளை. ஏரியின் குளிர்ந்த நீரில் மூழ்கி, அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டபிறகு மத்தியான தியானத்திற்கு அமர்ந் தான். தான் எதற்காக அங்கே வந்தோம் என்பதை முற்றிலும் மறந்தவனாய், நெடுநேரம் தியானத் திலேயே இருந்துவிட்டான்.

குழந்தை இருந்த இடத்தில் மான் கூட்டம் ஒன்று வந்தது. தாய்மை உணர்ச்சியால் தாக்குண்ட பெண்மான் ஒன்று குழந்தைக்குப் பாலூட்டியது. மற்ற மான்கள் யாவும் குழந்தை யின் அழகை அள்ளிப் பருகி, கோட்டைப் போலச் சுற்றி வளைத்துக் கொண்டன.

அகஸ்மாத்தாக, அந்த வழியில் வேட்டைக்கு வந்த மன்னன் மான்கள் கூட்டமாக நிற்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டு நெருங்கினான். மான்கள் மருளவில்லை. மன்னனுக்கு இடம் அளித்தன. பச்சிளங் குழந்தையும், ஓர் மாதின் பிணமும் அங்கே காணவே வியப்பும் திகைப்பும் அடைந்தான் அரசன். சிசுவை அநாதரவாக விட்டு மாதைக் கொலை செய்தவனைக் கண்டுபிடிக்க நாலா பக்கங்

களிலும் தூதர்களை ஏவினான். யாரோ ஒரு கள்வன் பெண்ணைக் கொன்றுவிட்டு நகைகளை அபகரித்துக் கொண்டு போயிருக்கவேண்டுமென்று அரசன் ஐயமுற்றான்.

தூதர்கள் ஏரியை அடைந்து, ஆசனத்திலமர்ந்து தியானிக்கும் பிராம்மணனைக் கையும் மெய்யுமாகப் பிடித்துக்கொண்டார்கள். விலங்கிட்டுக்கொண்டு அவனை அரசனிடம் சேர்த்தார்கள். ஏழைப் பிராம்மணன் கொலைக் குற்றம் சாட்டப்பட்டான். அப்பால் சுகேசன் தன் வரலாற்றை ஆதியோடந்த மாய்ச் சாற்றினான். தான் சொன்னது மெய்யென்று நிரூபிக்க குழந்தையின் தலைக்கடியில் வைக்கப்பட்ட இலையை அத்தாட்சியாகக் காண்பித்தான். அதில் எழுதப்பட்ட ஸ்லோகமும் அவன் கூறிய ஸ்லோகமும் ஒன்றாய் இருக்கக் கண்டான் அரசன். பிராம்மணனுடைய அடிகளில் வீழ்ந்து, ஆராயாமல் அளித்த மரண தண்டனையை ரத்து செய்து மன்னிப்புக் கோரினான் அரசன்.

அப்பால், அரசன் புத்திரன் இல்லாததால், அக் குழந்தையை தனக்குக் கொடுக்குமாறு சுகேசனிடம் வேண்டினான். அதற்கு உடன் பட்டான் சுகேசன். அரசனுடைய ஏற்பாட்டின் பிரகாரம் சுகேசனின் மனைவியின் சடலம் தகனம் செய்யப்பட்டது. அரசன் சுகேசனுக்கு நிறைய சன்மானங்கள் அளித்து, குழந்தையுடன் அரண் மனைக்குத் திரும்பலானான்.

இங்ஙனம், சுகேசன் சகலவிதமான பொறுப்புக் களினின்றும் விடுதலை பெற்றான். அவன் சுதந்திர மாய் இருக்கிறான். நிவிர்த்தி மார்க்கத்தைத் தழுவினான். கடுமையான தவம் புரிந்தான். ஆத்மாவைப் பற்றியே இடைவிடாமல் தியானிப்

பதன் வாயிலாக, அவன் நிர்விகல்ப சமாதி நிலையைப் பெற்றான்.

சுகேசப் பிராஹ்மணனின் தீவிர பக்தி, வைராக்கியத்தைக் கவனியுங்கள். அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகனான ஆண்டவன் தன் பக்தர்களைக் கவனித்து, அவரவர்களுடைய தேவைகளை மர்மமான முறையில் நிறைவேற்றிவைக்கிறார்.

கடவுளிடத்தில் தயக்கமில்லாத பக்தியையும், ஆத்ம சரணாகதியையும் செலுத்திவருக. லோகாயத விவகாரங்களில் ஈடுபட்டிருந்தாலுங்கூட, மகத தேசத்துப் பிராஹ்மணனின் கீர்த்திவாய்ந்த ஸ்லோகத்தை இடையறாது உச்சரிக்கவும். பற்றற்ற வாழ்க்கையை நடத்துக. நீங்கள் இறைவனைச் சாக்ஷாத்கரிப்பதுமட்டுமின்றி அமரத்வ நிலையையும் அடைவீர்கள். இதை பக்தி சிரத்தையுடன் சொல்கிறவனும், ஞாபகத்தோடு கேட்கிறவர்களும் முக்தி நிலையைப் பெறுவார்கள்.

# 14. கோபிசந்த் மகாராஜா துறவு

ஹிந்துஸ்தானத்தில் புராதன காலத்தில் வழங்கிவந்த பல்வேறு சமயங்களில், நாத் சமயம் பல மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. இந்த மதத்திற்கு ஜலேந்திரநாத் என்பவர் ஸ்தாபகரும் தலைவருமாவார். அவர் தமது (நாத்) மதத்தின் கோட்பாடுகளை விரிவாக எடுத்து விளக்கினார். பற்பல இடங்களில் தியானப் பழக்கத்திலிருந்து பெற்ற திவ்ய சக்திகளினால் அவருக்கு அமானுஷ்யமான யோகசாதனைகள் சித்தியாகிவிட்டன.

ஒருநாள் அவர் வழக்கம்போல் தியானத்தில் அமர்ந்திருக்கும்போது திடீரென்று தெய்வீகச்செய்தி ஒன்று புலப்பட்டது. ஹல்லாப்பட்டணத்திற்குச் சென்று, மகாராஜா கோபிசந்தின் பட்டத்துத் தாயார் மைனாவதிக்கு போதனை செய்து நாத் மதத்தில் சேர்த்துக்கொண்டு தீக்ஷை புரியுமாறு அறிவுறுத்தியது அச்செய்தி. இதுபோன்ற தெய்வீகச் செய்தியை ராணி மைனாவதியும் கூட கேட்டாள்.

கோபிசந்த் மகாராஜா, ராணி லோமாவதியிடமிருந்து குருமஹாராஜ் விஜயம் செய்துள்ள செய்தியை அறிந்தார். மகாராஜாவுக்கு ஆசை ராணி லோமாவதி. அவளிடத்தில் ஆண் குழந்தை பிறந்தது. லோமாவதியோ மகாராஜாவை ஓர் அரசனைப் போலன்றி சாதாரண மனிதனைக் காதலிப்பதுபோல் காதலித்தாள்.

கோபிசந்த் மகாராஜா கடமை தவறாத புத்திரர். தாயாரைப் பெரிதும் பேணுவார். மகாராஜா ஸ்நானத்திலிருந்தார். வழக்கம்போல ராணிகள் அவரை குளிப்பாட்டி, வேண்டிய பணி

விடைகள் புரிந்து, அலங்கரித்துக் கொண்டிருந் தார்கள். ஒரு சில நாட்களுக்கு முன்தான் ராணி மைனுவதிக்குத் தீக்ஷை வழங்கப்பட்டது. தன் மகன் குளிக்கும்போது, ராணிகள் அவனை மகிழ் வுடன் சூழ்ந்து பணிவிடைகள் புரிவதைக் கண் காணித்துக்கொண்டே இருந்தாள். அவ்வளவு சீரும், சிறப்பும், ஆடம்பரமும் மிகுந்த அந்த அரண்மனையில் அழகே வடிவெடுத்த தன் மகனின் உடம்பைக் காணும்போது, புதிய எண்ணங்கள் பல அவளுடைய நெஞ்சைத் தழுவின. ''மானுஷ்ய தேகம் அழிந்துதானே போகும்! இது விலக்க வொண்ணுத விதி. எல்லாப் பொருள்களும் சென்ற போக்கிலே என் மகனுடைய அழகிய உடம்பு கூட போகத்தான் வேண்டும். பேரழிவு முற்றிலும் தவிர்க்க முடியாததாயிருக்க, இந்தப் போராட்டத் திஞல் என்ன பயன்?'' என்று மைனுவதி ஞான தீக்ஷை பெற்றபடியால் ஞான மார்க்கமாகத் தன் மனத்தை ஓட்டிக்கொண்டிருந்தாள். அவளையறி யாமலே அவளுடைய கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்துகொண்டே இருக்க, ஒரு துளி கண்ணீர் கோபிசந்த் மகாராஜாவின் உடம்பின்மேல் விழுந்து விட்டது. மகாராஜா மேலே பார்த்தார். தாயார் அழுது கொண்டிருப்பதைக் கண்டார். சகலத்தையும் உதறித்தள்ளி வெளிக்கிளம்பினுர். தம் தாயாரின் துயரத்திற்குக் காரணத்தைக் கண்டு பிடித்து, அதற்கு உடனே பரிகாரம் காணவேண்டு மென்பதே அவருடைய முதலாவது எண்ணம்.

ரத்தன்குமாரி என்பவள் மகாராஜாவினுடைய இரண்டாவது ஆசை ராணி. ராணி லோமாவதிக்கு எல்லா வகைகளிலும் மாறுபட்ட கோட்பாடுகள் கொண்டவள் ரத்தன்குமாரி. இவ்வாறு மகாராஜா குளிக்கும் வேளையில், கரடி புகுந்தாற்போலக் கலகம் பண்ணியதால் மகாராஜாவின் தாயாரை

அவள் வெறுக்கலானாள். தாய்க்கும் தனயனுக்கும் இடையில் என்ன தகராறு என்பதை ஆராய்ந்து உணர்ந்துகொள்ள வேண்டுமென்று அவள் கூட ஆசைப்பட்டாள். ஆகையால், அவள் மகாராஜா வைப் பின்தொடர்ந்து ஓடி ஒட்டுக்கேட்டல் என்ப தாகிய பெரிய குற்றம் புரியலானாள். ஜலேந்திர நாத் குருதேவரிடம் தீக்ஷை பெற்று, அவருக்குச் சிஷ்யராய் விளங்குவதாக வாக்குத்தத்தம் செய்து கொடுத்தார் மகாராஜா. ரத்தன்குமாரி இதை ஒட்டுக் கேட்டதும் அவள் உண்மையில் வெல வெலத்துவிட்டாள். தன் புருஷன் சந்நியாசி ஆகட்டுமென்று எந்தப் பெண்தான் விரும்புவாள்? மகாராஜா மதப்பற்றுக் கொள்ளாமல் தடுப்பதற்கு வழி என்ன? ரத்தன்குமாரி மகா தீவிர புத்தி படைத்தவளாதலால், தாயாரிடம் எப்படி யேனும் பகைமை கொள்ளக்கூடிய அளவுக்கு மகாராஜாவின் மனத்தில் விஷம் பாய்ச்சி; அரண்மனையிலிருந்து ஜலேந்திரநாத் குருவை வெளியேற்றிவிட வேண்டுமென்கிற வழி ஒன்று தவிர வேறில்லை என்று உறுதி கொண்டாள். ஜலேந்திரநாத் குருதேவருக்கும் ராணி மைனு வதிக்கும் (மகாராஜாவின் தாயார்) உள்ள உறவு குரு சிஷ்யை நிலை அல்ல என்றும், அது ஸ்திரீ புருஷ நிலையே என்றும் வதந்தி ஒன்று பரப்பப்பட்டது. இதைத் தவிர வேறு என்ன உயர்ந்த ஆயுதம்தான் இருக்கிறது? ராணியா யிருந்தபடியால், ரத்தன் குமாரியால் சுலபமாகப் பல அத்தாட்சிகள் கற்பனை செய்யப்பட்டன. இந்த வதந்தி பரவிவிட்டது. எதிர்பார்த்தவாறு எல்லாம் நிகழ்ந்தது. மகாராஜா கலங்கினார். ராணி, லோமாவதி ரத்தன் குமாரியிடம் மகா ராஜாவின் மனத்தை நச்சுப்படுத்தக்கூடாதென்று எவ்வளவோ புத்திமதி எடுத்துக்கூறினாள். ரத்தன் குமாரியோ அந்த உபதேசத்திற்குச் செவி சாய்க்க

வில்லே. மகாராஜாவின் மூலமாய்த் தன் விரோதிகள் அனைவரையும் ஒழித்துக்கட்டுவதில் அவள் தன் எல்லாச் சக்திகளையும் திரட்டி ஒருமுகப்படுத்தினள்.

கோபிசந்த் மகாராஜா தனது தாயாரின் அந்தப்புரத்திற்கு விரைந்தார். ஜலேந்திரநாத் குருதேவர் பேச்சை ஒட்டுக்கேட்டதில், காதில் விழுந்த ஒரு சில சொற்களைக் கொண்டு தப்பர்த்தம் பண்ணிக்கொண்டார். மகாராஜாவின் சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்தினள் ரத்தன்குமாரி. எனவே, கோபிசந்த் மகாராஜா ஜலேந்திரநாத் மகா குருவைத் தொலைத்துவிட வேண்டுமென்று தீர்மானித்துவிட்டார். மேல் மாடத்தில் குருதேவர் உலாவிக் கொண்டிருக்கையில், மகாராஜா அவரைத் தூக்கித் தமது தோளின்மேல் சாய்த்துக் கொண்டுபோய் பாழுங்கிணற்றில் எறிந்தார்.

கிணற்றில் தள்ளப்பட்டவுடன், யோக சக்தியினல் குருதேவரிடமிருந்து ஓர் செய்தி அவரது பிரதம சிஷ்யர் கானிப் என்பவருக்கு மின்னல் போலத் தோன்றியது. மலைச்சிகரத்தின்மீது தமது சிஷ்யர்களுடன் தியானத்திலிருந்தபடியால், கானிப் தமது ஞானயோக திருஷ்டியினல் மாத்திரம் அச் செய்தியைப் பெற முடிந்தது. அவர் இதர சிஷ்யர்களுக்கு குருதேவருக்கு நேர்ந்துள்ள சோதனைச் செய்தியை விளக்கினர். அவர்கள் எல்லோரும் தமது குருதேவரைக் காப்பாற்றுவதற்காக ஹல்லாப் பட்டணத்திற்குப் புறப்பட்டார்கள்.

மகாராஜா நிம்மதியற்ற நிலையில் இருந்தார். அடிக்கடி அவருடைய மனச்சாட்சி எழுந்து முள் போலக் குத்திக்கொண்டிருந்தது. ரத்தன்குமாரி

எல்லாவற்றிற்கும் சமாதானம் கூறிக்கொண்டிருந்தாள். எதுவும் அவருக்கு ஸாந்தி அளிக்கவில்லை. ராஜ்யத்தின் எல்லைக்குள் எந்த சந்நியாசியையும் விடக்கூடாதென்று போர்வீரர்களுக்கு ரத்தன் குமாரி உத்தரவு பிறப்பித்துவிட்டாள். கானிப் தமது சிஷ்யர்களுடன் ராஜ்யத்தின் எல்லைக்கு வந்துவிட்டார். ராஜ்யத்திற்குள் பிரவேசிக்க அனுமதி தரவில்லை போர்வீரர்கள்; தமது யோக வலிமையால் எல்லாப் போர்வீரர்களையும் பெண்களாக உருமாற்றி விட்டு, உள்ளே பிரவேசித்தார். மந்திரங்களினால், நகர வாசற் கதவுகளைத் திறந்து கொண்டு நேராக அரண்மனைக்குள் சென்றார். தமது சிஷ்யர்களுடன் ஓடிவிடுமாறு மகாராஜாவுக்கு புத்திமதி கூறப்பட்டது. உண்மையான க்ஷத்திரிய ரத்தம் உடலில் ஊடுருவிப் பாய்வதால், கோழைத்தனத்திற்கு இடம் கொடுக்கவில்லை. கானிப் அமானுஷ்ய சக்திகளை நன்கு தெரிந்திருந்தும்கூட, மகாராஜா போர் தொடுக்கத் தயார் செய்து கொண்டார். தாளிடப்பட்ட மாளிகைக்குள் புகுந்தார் கானிப். தனது வஞ்சனை வெளிப்பட்டுவிடக்கூடுமெனக்கருதி ராணி ரத்தன்குமாரி ஓடிப்போய்விட்டாள். பட்டத்துத் தாயார் மைனவதி கானிப்பை வணங்கி தான் குருதேவருடைய சிஷ்யை என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டாள். குருதேவர் ஜலேந்திரநாத் சுவாமியின் அப்போதைய நிலையை கானிப் அறிவார்; எனினும் கோபிசந்த் மகாராஜாவின் வாயிலிருந்து உண்மையைக் கக்கச்செய்து அவரை பச்சாத்தாபப்படும்படி செய்ய வேண்டுமென்று அவாவினார். பிடிவாதமாய் மகாராஜா பேசினார். அவரது லிங்க தேகம் (Astral body) பிரார்த்தனை செய்யப்பட்டு உண்மை ஒப்புக்கொள்ளும்படி தூண்டப்பட்டது. மகாராஜா தமது குற்றத்தை ஒப்புக்கொண்டார். ராணி லோமாவதியின்

வேண்டுகோளின்படி மகாராஜா மன்னிப்புப் பெற்றார். குரு ஜலேந்திரநாத் தள்ளப்பட்ட கிணற்றண்டை, வெவ்வேறு லோகங்களால் செய்யப்பட்ட ஐந்துவிதமான சிலைகளுடன் வந்து சேருமாறு மகாராஜாவுக்கு உத்தரவிட்டார் கானிப். காமம், கோபம், அகங்காரம், ஆசை, பொறாமை ஆகிய ஐந்தும் சன்மார்க்கச் சத்துருக்கள். (Moral enemies) மேற்கண்ட ஐந்து சிலைகளும் ஐந்து சன்மார்க்கச் சத்துருக்களை நிரூபணம் செய்கின்றன.

ராஜ்யத்திலுள்ள குடிமக்கள் அனைவரும் பாழுங்கிணற்றைச் சுற்றிக் கூடிவிட்டார்கள். குரு ஜலேந்திரநாத் தள்ளப்பட்ட கிணற்றண்டை மிகுந்த பயபக்தியோடும் பணிவடக்கத்துடனும் பிரார்த்தனை செய்தார் மகாராஜா. தவறான எண்ணத்துடன் செய்த குற்றத்தை மன்னிக்குமாறு பிரார்த்தனை செய்தார். சன்மார்க்க சத்துருக்களைக் குறிக்கும் அந்த ஐந்து சிலைகளும் தீக்கு இரையாக்கப் பட்டன. உலக வழக்கில் தப்புவழி சென்ற மகாராஜாவின் குறிப்பிட்ட சூக்ஷ்ம உடல் நெருப்பிட்டுக் கொளுத்திச் சாம்பலாக்கப்பட்டதென்று பொருள். இங்ஙனம் தூய்மை பெற்ற கோபிசந்த் மகாராஜாவுக்கு ஜலேந்திரநாத் குருதேவர் பாழுங் கிணற்றிலிருந்து வெளிப்பட்டு தரிசனம் வழங்கி, அவரை ஓர் சந்நியாசியாக ஆகுமாறு புத்திமதி கூறினார்.

புஜபல பராக்கிரமம் படைத்த மகாராஜா கோபிசந்த் இங்ஙனம் சகலவற்றையும் துறந்து கடவுளையும் சத்தியத்தையும் நாடி, அருள்தாகம் கொண்டவராய் ஜலேந்திரநாத் குருதேவர்க்கு மிக அத்யந்த சிஷ்யர் ஆகிவிட்டார். சுபம்.

# 15 ஹரிப்பிரியரும் மண்டபமும்

சரித்திரப் பிரசித்தி பெற்ற பாஞ்சால தேசத்து ஹரிப்பிரியர் மகாராஜா ஒரு காலத்தில் கவர்ச்சிகர மான, விசாலமான ஓர் மண்டபத்தைக் கட்டினுர். மக்கள் கூடி மதசம்பந்தமான விரிவுரைகள் நடத்து வதற்கென்றே அது கட்டப்பட்டது. மண்டபத்தின் அருகில் ரமணீகரமான பூங்காவனமும், பளிங்கு போன்ற ஜலம் நிறைந்த தடாகமும் அமைத்தார்.

மண்டபத்தைத் திறந்து விழாக் கொண் டாடினுர். மக்கள் எல்லோருக்கும் விழாச்செய்தி அறிவிக்கப்பட்டது. குறிப்பிட்ட நேரத்தில் அனை வரும் கூடினுர்கள். மூச்சுத் திணறும்படி அவ்வளவு கூட்டம் மண்டபத்தில் கூடிவிட்டது. தர்பாரில் அரசர் அமர்ந்திருந்தார். சபையின் ஆரவாரத்தி னிடையில் அரசர் எழுந்து பேசலானுர். ராஜ்யத்தில் அப்போதைய சில முக்கிய விஷயங்களை மக்களிடத்தில் எடுத்துரைத்தார். மண்டபத்தைக் குறித்து விமர்சனங்களை வரவேற்ருர். மக்கள் காட்டுகிற குறிப்பிட்ட ஓர் பகுதியை இன்னும் சிறந்த முறையில் திருத்தி அமைக்கவோ அல்லது புதிதாகக் கட்டவோ மன்னர் ஒப்புக்கொண்டார். ஒவ்வொருவரும் மண்டபத்தைக் குறைகூறும் கண்களுடன் கூர்ந்து நோக்கினுர்கள். அதன் அமைப்பில் யாதொரு குற்றத்தையும் கண்டுபிடிக்க அவர்களால் முடியவில்லை. கட்டடம் ஓர் நிபுணரால் கட்டப்பட்டதால், யாதொரு குறையும் கூறத் துணியவில்லை, என்று அவர்கள் கூறினுர்கள். அந்த பெரிய கூட்டத்தினின்று அரை நிர்வாண ஸாது ஒருவர் வெளிப்பட்டார். ''அரசர் பெருமானே! இந்த மண்டபத்தில் இரண்டு குறைகள் உண்டு. அவைகளைத் திருத்த இயலாதென்பது அடியே னுடைய தீர்மானம். இதற்காக அடியேன்

வன்மையாக வருந்துகிறேன். நீங்கள் யாவரும் இதன் அழகில் சொக்கிப்போயிருக்கிறீர்கள்'' என்று அழுத்தம் திருத்தமாகப் பேசினார். அக்குறைகளைக் கூறுமாறு அரசர் வேண்டினார். அதற்கு ஸாது, ''மகிதல மன்னரே! இந்த மண்டபம் காலத்தின் கொடுமைகளுக்கு இலக்காகி, ஒருகாலத்தில் தரை மட்டத்தளவு அழிந்துபோம். இம் மண்டபத்தைத் திறம்பட நிர்மாணித்த நிபுணரோ இயற்கை எய்துவார். இன்னும் சில நூற்றாண்டுகளுக்குப்பின் வரும் சந்ததியார் இந்த மண்டபத்தின் இருப்பையும், இதைக் கட்டிய நிபுணர் இன்னார் என்பதையும் அறியமாட்டார்கள்'' என்று விளக்கம் கொடுத்தார்.

தம்முடைய பெருமையைப்பற்றியும், மண்டபத்தின் அருமையைப் பற்றியுமே எண்ணி எண்ணி இறுமாந்துபோன மன்னர் சித்தப்பிரமை கொண்டார். ஸாதுவின் சொற்கள் அரசரின் நெஞ்சில் பசுமரத்தாணிபோற் பதிந்து குழப்பத்தை உண்டு பண்ணிவிட்டன.

சிருஷ்டிக்கப்பட்ட எதுவும் சம்ஹாரத்திற்கு உட்பட்டே இருக்கிறது. மரணத்தின் பிடியினின்று விடுதலை பெறுவதற்கு எந்தப்பிராணிக்கும் இயலாது. எதுவும் சாஸ்வதம் அல்ல. நீ இறக்கும் போது உடைந்த குண்டூசிகூட உன்கூட வராது. உலகத்தில் கொண்டுவந்த ஸ்தூல சரீரத்தை ஒரு நாளைக்கு விட்டுவிடத்தான் வேண்டும். அன்பர்களே! இப்போது கண்ணைத் திறவுங்கள் பந்தத்தினின்று முக்தியை அடையப் பாடுபடுங்கள்.

ஓம் தத் ஸத்.

# 16. துளசிதாஸரும் ஓர் பெண்மணியும்

இராம சரித்திரம் இயற்றிய துளசிதாஸர் கங்காதீரத்தில் உலாவிக் கொண்டிருந்தார். மயானம் குறுக்கிட்டது. ஏராளமான ஆபரணங்கள் அணிந்த ஓர் யௌவனப் பெண்மணி இறந்துபோன தனது நாயகனின் பக்கத்தில் அமர்ந்து அகோரமாக அழுது கொண்டு இருந்தாள். முனிவர் வந்ததும் அடக்கமாக எழுந்து நின்று, ''மதிப்பிற்குரிய மஹானே! என் கணவன் போன மோக்ஷத்திற்குச் செல்ல ஆசீர்வதித்து எனக்கு வழி காட்டுங்கள்'' என்று இரங்கிய குரலில் வேண்டினாள்.

துளசிதாஸர், ''பெண்மணி! மோக்ஷத்தை உண்டாக்கிய அக்கடவுளுக்கு இவ்வுலகமும் சொந்தம்தானே?'' என்று வினவ, அதற்கு அப் பருவ நாயகி ''மோக்ஷத்தை நான் விரும்பவில்லை, என் கணவன் பக்கத்தில் — அவர் எங்கிருந்தாலும் அங்கிருக்க நான் விரும்புகிறேன்'' என்றாள். துளசிதாஸர், ''பெண்ணே! வீட்டுக்குத் திரும்பிப் போ; கணவனார் ஒரு மாதத்திற்குள் திரும்புவார். கவலைப்படாதே'' என்றார். அத்தேவாமிர்த மொழிகளைக் கேட்டு மனந்தேறிய அப்பெண் வீட்டுக்குத் திரும்பினாள். தன் கணவனார் ஓர் மாதத்திற்குள் திரும்புவார் என்ற நம்பிக்கை திடமாக எழுந்தது.

அன்று சாயுங்காலம் முதற் கொண்டு துளசிதாஸர் அப்பெண்ணின் வீட்டுக்குப் போய் பக்தியின் ஆழ்ந்த மர்மங்களைப் பற்றிப் போதிக்கலானார். நாளாவட்டத்தில் அவளுடைய மனத்தில்

பக்தி ததும்பலாயிற்று. உலக சுக போகங்களிடத்திலே வெறுப்பும் விரக்தியும் கொள்ளத் தொடங்கினுள். ஸ்ரீராமரைத் தன் கணவனுராகக் கருதி அவரைத் தன் ஹிருதயத்திலே நிலைநிறுத்தி வந்தாள்.

மாதம் முடிவதற்குள் ஓர் சிநேகிதை வந்து, ''நீ ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் உன் கணவனுர் திரும்பி வந்துவிட்டாரா?'' என்று கேட்டாள். அதற்கு அப்பெண், ''ஆம்'' என்றுள். அதற்கு அச் சிநேகிதை, ''அவர் எங்கே இருக்கிறுர்?'' என்று கேட்டாள். அவள் தன் கையை நெஞ்சின் மீது வைத்துக் கொண்டு, ''அவர் என் ஹிருதயத்தில் எழுந்தருளினுர். பாலும் நீரும் போன்று நாம் ஒன்றுகிவிட்டோம்'' என்றுள். அவள் மனம் எவ்வளவு தூரம் பண்பட்டுவிட்டது என்பதை நினைக்க நினைக்க சிநேகிதையினுடைய ஆச்சரியத்திற்கு அளவே இல்லை.

உறவினர்களின் மரணத்திற்காக அழாதே; கடவுளின் தரிசனத்திற்காக அழு. அவர் உனக்கு தரிசனம் அருளுவதன்றி உன் கண்ணீரையும் துடைப்பார்.

சத்சங்கத்தின் மஹிமை இதுதான். துளசிதாஸர் அப்பெண்ணுக்கு உபதேசிக்கவே, அவளது ஆத்மாவில் ஞானம் உதயமாயிற்று. இறந்துபோன கணவனை மறந்து, ஸ்ரீ இராம பிரானையே ஆத்ம நாயகராகப் பாவித்துக் கொண்டாள். என்னே சத்சங்கத்தின் மஹிமை!

# 17. சுபிரியா ஓர் ஏழைப்பெண்

சிரவஸ்தி எனும் ஊரில் பஞ்சம். புத்த பகவான் தமது சிஷ்யர்களைப் பார்த்து, ''பிரிய முள்ள சிஷ்யர்களே! பட்டினியுள்ளவர்களுக்குப் போஜனம் படைக்கும் திருப்பணியை யார் ஏற்றுக் கொள்ளப் போகிறீர்கள்!'' என்று கேட்டார். பணத்தை வட்டிக்குக் கொடுத்துப் பணக்காரரான ரத்திஞகர் என்பவர், ''பஞ்சத்தால் வாடிய மக்களைத் திருப்திப்படுத்த என்னிடம் உள்ள பண மெல்லாம் எந்த மூலை? கடலில் உள்ள ஓர் துளிக்குச் சமம்'' என்றார். ஜயசேஞ என்பவர், ''என் வாழ்நாள் பூராவும் இத்தகைய தர்ம கைங்கரியத்தை நானே ஏற்றுக்கொள்வேன். ஆனால், உணவுப் பொருள்கள் என்னிடமில்லையே'' என்றார்.

ஜமீன்தார் தம்மபாலர் பல ஏக்கர் நிலங்களைக் கொண்டவர். பெரிய தனவந்தர். அவர், ''மழை இல்லாததால், பயிர் விளையவில்லை. இந்த வருஷம் கிஸ்தி பணம்கூட கட்ட முடியவில்லை. நான் என் செய்வேன்?'' என்று அங்கலாய்த்தார்.

சுபிரியா என்ற ஏழைப்பெண் எழுந்து நின்று, ''பகவானே! அந்த பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன்'' என்று பணிவாகப் பகர்ந்தாள். எல்லா சிஷ்யர்களுக்கும் ஆச்சரியம்! ''எப்படி அம்மா, நீ உணவளிப்பாய் பட்டினி மக்களுக்கு'' என்று கேட்டார்கள். அதற்கு சுபிரியா, ஏழை நான். எனது மனோவலிமைக்கு ஏழ்மையே காரணம். உங்கள் ஒவ்வொருவரையும் நெருங்கி உடைந்த பிச்சைப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வந்து சாதத்திற்காகக் கெஞ்சுவேன். பிச்சையாய்க் கிடைத்த சாதத்தைக் கொண்டு பட்டினிப் பட்டாளங்களுக்கு நான் படைத்துப் பரம சந்தோஷமடைவேன்'' என்றாள்.

ஏழையாயிருந்தும், வாழ்க்கையில் எளிய நிலையி லிருந்தும் சேவை செய்ய வேண்டிய தியாக உணர்வின் வெள்ளத்தை எப்படி எடுத்துரைப்பது! உடம்பின் ஒவ்வொரு துவாரத்தினின்றும் சேவையின் உணர்வு பொங்கித் ததும்பும் அன்பு வழிந்த இருதயமே நாம் விரும்புவது, போற்றுவது. (இதைத் தவிர உலகில் உயரிய பண்பாடு வேறு எதுவுமில்லை.)

## 18. இராமாயணக் கதைகள்

### (அ) அனுசூயாதேவி

அத்திரி மகரிஷியின் பத்தினி அனுசூயாதேவி கற்புக்கரசி. பெருந்தவஞ்செய்வதில் வாழ்வை நடத்திக்கொண்டிருந்தாள். பத்து வருஷம் பஞ்சம் மக்களைப் படாதபாடுபடுத்தியது. அனுசூயாதேவி தனது யோக சக்தியினால் பழங்களையும் கிழங்குகளை யும் சிருஷ்டித்தாள் — தனது ஆசிரமத்தினருகில் கங்கை பாயும்படிகூட செய்தாள்.

ஒரு காலத்தில் மாண்டவ்விய மகரிஷி ஓர் தபசி யின் மனைவியைப் பார்த்து, ''இரவு கழிந்தவுடன் நீ விதவை ஆகிவிடுவாய்'' என்று சபித்தார். ஆனால் அனுசூயாதேவி தனது ஆத்ம பலத்தினாலே அந்த இரவை பத்து இரவுகளாக நீடிக்கச் செய்தாள்.

ஓர் கற்புடைய காரிகை தனது கற்பின் மஹிமையால் வியப்பிற்குரிய பல சம்பவங்களையும் நிகழ்த்த முடியும், மூவுலகங்களையும் அசைக்க முடியும்.

### (ஆ) வில்வலனும் வாதாபியும்

இந்த இரண்டு அரக்கர்களும் தண்டகாருண் யத்தில் வசித்து வ ந் த ா ர் க ள். சந்நியாசிகளை யும் பிராஹ்மணர்களையும் கொன்றுவந்தார்கள். கொடிய வில்வலன் பிராஹ்மண வேடந்தாங்கி சிரார்த்தத்திற்கு வருமாறு பிராஹ்மணர்களை அழைப்பது வழக்கம். ஆடு வடிவம் தாங்கிய தன் சகோதரன் வாதாபியை அறுத்துக் கறி சமைத்துப் பிராஹ்மணர்களுக்குப் படைப்பான்.

போஜனம் எல்லாம் முடிந்ததும், வில்வலன், ''வாதாபி! வா வெளியே'' என்று உ ர க் க க் கூப்பிடுவான். ஆட்டைப்போலக் கத்தியவண்ணம் பிராஹ்மணர்களின் வ யி ற் றை க் கிழித்துக் கொண்டே வெளிப்படுவான் வாதாபி. இங்ஙனம் கொல்லப்பட்ட பிராஹ்மணர்களோ அனந்தம்.

ஒரு காலத்தில் அகஸ்தியர் தே வ ர் க ளி ன் வேண்டுகோளின்படி சிரார்த்தத்திற்குப் போய் போஜனம் உட்கொண்டார். ''வாதாபி! வா, வெளியே'' என்று கூப்பிடவே, திவ்ய ஞானியாகிய அகஸ்தியர் பு ன் மு று வ லு ட ன் ''வில்வலா! ஆட்டுருவம் உள்ள உன் தம்பி என் வயிற்று ஜடராக்கினிக்கு ஆளாகி ஜீரணமாகிக்கொண்டிருக் கிறான். அவன் வரமாட்டான் வெளியே'' என்று பதில் கூறினார்.

### (இ) சீதாதேவி இராமரிடம் கூறிய கதை

நெருப்பில் சம்பந்தப்பட்ட ஓர் வஸ்து தன் இயற்கையை மாற்றிக்கொள்வதுபோல், ஆயுதம் ஒன்றைத் தாங்குவோரின் தன்மையில் மாறுதல் ஒன்று காணமுடியும். தங்கள் மீதுள்ள பிரேமையால்

மரியாதையினால் இதை நான் எடுத்துக்காட்டி ஞாபகப்படுத்துகிறேன். தங்களுக்கு நான் போதிப்பதாகக் கருத வேண்டாம்.

முற்காலத்தில் தூய்மையான ஸாது ஒருவன் வனத்திலே ஏகாந்தமான இடத்திலே தெய்வீகத் தவத்திலே ஆழ்ந்திருந்தான். அவனுடைய தவத்தைக் கெடுக்க வேண்டுமென்று கக்கணங் கட்டிக்கொண்ட இந்திரன் போர் வீரன் போன்று காட்சியளித்து, ஓர் போர்வாளை வைத்துக் கொண்டிருக்குமாறு ஸாதுவிடம் ஒப்படைத்தான். நம்பிக் கொடுத்த அந்த வாளைப் பத்திரமாக வைத்துக் கொண்டிருக்க வேண்டுமே என்ற அச்சத்தால் காய், கனி கிழங்குகளைப் பொறுக்கச் சென்ற போதுங்கூட வாளை எடுத்துக்கொண்டு போவான். போர்வாளைக் கையிலெடுத்துக்கொண்டு இடையறாது திரிந்தபடியால், படிப்படியாக அந்தச் சாது தூய்மையான தவநெறியைத் தள்ளிவிட்டுப் பிராணிகளைக் கொல்லுவதிலே அந்த வாளைப் பிரயோகித்து வரலானான். நெருப்பு விறகிலே மாறுதலை உண்டுபண்ணுவதுபோல, ஆயுதங்களைக் கையாளுதல்கூட மனித உள்ளத்திலே ஓர் மாறுதலைக் கொண்டுவருகிறது — இக் கருத்தை விளக்குவதற்காகத்தான் நான் இக்கதையை தங்களுக்குச் சொன்னேன்.

[முமுக்ஷு மிக உற்சாகமாயிருக்க வேண்டும். ஸாந்த ஸ்வரூபியான, கருணை உள்ளம் கொண்ட ஸாது எப்படி ஓர் கொடியவன் ஆனான் என்பதைக் கவனியுங்கள். ஆயிரத்து ஒன்று வலைகளும் படுகுழிகளும் முக்கியமாக ஸாதகர்களுக்கு வந்து சூழ்கின்றன. ஸாது எப்படி மாறினானோ, அப்படியே இவர்களும் நெறி பிறழ்ந்து தீயோர்களாகி அவஸ்தைப்படுகிறார்கள் — ஜாக்கிரதையாயில்லாவிடில்,

பல்வேறு வழிகளில் மாயை என்னும் விதி விளையாடு கிறது. எப்போதும் நீங்கள் ஜாக்கிரதையாயும் சுறுசுறுப்பாயும் இருக்கவேண்டும். ஆத்மீய சாதனை கொஞ்சம் பழகிச் சிறிது அனுபவம் பெற்ற வுடனேயே, யோகத்திலோ ஆத்மீயத்திலோ அதிகபட்ச அளவு நிலையை அடைந்துவிட்டதாகக் கருதவே கூடாது. சாஸ்திரங்களில் கூறப்பட்ட வையும் உங்களுடைய குருதேவரால் உபதேசிக்கப் பட்டவையுமான எல்லாப் போதனைகளையும், எச்சரிக்கைகளையும் நீங்கள் அனுஷ்டிக்காமல் அஜாக்கிரதையாயிருந்தீர்களானால், ரப்பர் பந்து ஒன்று மாடிப்படிக்கட்டின் ஒரு படியினின்று இன்னொரு படிக்குச் சுழன்று வீழ்ந்துகொண்டே தரையை ஒரு செகண்டில் அடைவது போன்று, நீங்களும் கண்ணிமைக்கும் க்ஷணப்பொழுதிலே வீழ்ச்சிபெறுவீர்கள். அகம்பாவம், பிடிவாதமான சுபாவம் அல்லது சுயநலமுடைமை போன்ற காரணத்தினால் உங்கள் மனப்போக்கிலே செல்வீர் களானால் வெகு விரைவில் நாசத்தை அடைவீர்கள்.

## 19. ஒரு மாட்டு வண்டிக்காரன்

சிருஷ்டிகர்த்தா பிரம்மதேவர் வாழ்க்கையின் பலன்களை அவரவர்களுடைய தலையில் ''எழுது கிறார்''. எதிர்காலத்தில் நடைபெறவிருக்கும் பலா பலன்களின் ஸ்தூலக் குறிப்புகள் அங்கே இருக்கும். ஆனால், தலையில் பிரம்மா என்ன எழுதினார் என்பதை யாராலும் இதுவரையில் தெரிந்து கொள்ள முடிந்ததில்லை.

ஆதிகாலத்தில், ஒரு வண்டிக்காரனுடைய மகனுக்குத் தலையில் பிரம்மா எழுதிய விஷயம் இன்னது என்று தெரிந்துகொள்ளும் அதிர்ஷ்டம் இருந்தது. அவனுக்குச் சகஜ ஞான ஒளி உண்டா யிற்று. பிரம்மா ''மாடுகள் உன் வாழ்க்கையை நடத்துவதற்கு உற்ற துணைகள் ஆகும்'' என்று தன் தலையில் எழுதியுள்ளார் என்பதைத் தெரிந்து கொண்டான் அவன்.

அவனுடைய தகப்பனார் வயோதிகமடைந்து விட்டபடியால், அவன் வண்டி ஓட்டும் தொழிலில் ஈடுபடலானான். நாள் முழுவதும் வண்டி ஓட்டி அலுத்துப்போய் சாயங்காலம் நாலரையணாக் காசு களுடன் திரும்புவான். இந்த அற்ப வருமானத்தில் கள்ளுக் கடையில் இரண்டணா செலவழிப்பான். பாக்கி இரண்டரையணாதான் வீட்டில் கொடுப் பான். அவனும், மனைவியும், குழந்தையும், பெற்றோரும் ஆக 5 பேர் இக்காசைக்கொண்டு வயிறு கழுவ வேண்டும். அந்தக் காலத்தில், இப்போதைப்போல விலைவாசிகள் ஏற்றம் இல்லை.

ஒருநாள் சாயங்கால வேளையில் அவனுடைய மூளை வேலை செய்யலாயிற்று. கடினமான உழைப் பாகிய வண்டி ஓட்டும் வேலையில் இரவு பகல் ஈடு பட்டும், தன்னுடைய (தன் குடும்பத்தினருடைய) உடலையும், ஆத்மாவையும் இணைக்கக்கூடக் கடின

மான வறுமை நிலையில் தான் தவிப்பதை எண்ணி எண்ணி ஏக்கப்படலானான். "மாடுகள் உன் வாழ்க்கையை நடத்துவதற்கு உற்ற துணைகள் ஆகும்" என்ற பிரம்மதேவருடைய சொற்கள் பளிச்சென்று நினைவுக்கு வந்தன. திடீரென்று உறுதியான தீர்மானம் பண்ணினான். அன்று மாலை வண்டி, மாடுகள் ஆகியவற்றை ஏலம் போட்டு ரூபாய் இருபதுக்கு விற்றான். அவை நூற்றைம்பது ரூபாய்க்குமேல் விற்பனை ஆகக்கூடிய மதிப்புடையவை. வெறும் இருபது ரூபாய்க்கு விற்றமையைக்குறித்து மக்கள் வியப்புற்றார்கள். அவனுடைய உள்ளக்கிடக்கை இன்னதுதான் என அவர்களால் தெரிந்துகொள்ள இயலவில்லை.

கடைக்கு ஓடிப்போய், தன் மகனுக்கு மிட்டாய்களும், மனைவிக்குச் சேலையும், தன் பெற்றோர்களுக்கு ஆடைகளும் வாங்கினான். அவன் அன்றிரவு எல்லோரையும் அழைத்து விருந்து அளித்தான். தன் ஜீவனத்திற்கு உற்ற துணையாயிருந்த மாடுகளையும் வண்டியையும் விற்றதாக வீட்டார்களிடம் ஒருவார்த்தைகூடச் சொல்லவில்லை! படுக்கைக்குப் போகுமுன்பு கிடைத்த இருபது ரூபாயும் இவ்வாறு செலவழித்துத் தீர்த்தான். "உன் வாழ்க்கைக்கு மாடுகள் உற்ற துணைபுரியும்" என்று அவன் தனக்குத்தானே கூறிக்கொண்டவனாய் உறங்கலானான்.

காலையில் எழுந்தவுடன் கொட்டிலுக்குப் போனான். பிரம்மதேவருடைய தலை எழுத்துக்களைச் சிந்தித்தான். மாடுகளையும், வண்டியையும் ஏற்கனவே விற்றாகி விட்டதல்லவா! என்ன ஆச்சரியம்! அந்தக் கொட்டிலில், நேர்த்தியான இரண்டு மாடுகளும், ஒரு வண்டியும் இருக்கக் கண்டான். பிரம்மதேவருடைய தலை எழுத்துக்கள் பொய்க்காதென்பதை உணர்ந்துகொண்டான்.

ஓம் தத் ஸத்.

# 20. குற்றஞ்சாட்டாதீர்கள்

ஒரு சமயம் கொசுக்கள் எல்லாம் சேர்ந்து ஒரு முக்கியமான மகாநாட்டைக் கூட்டின. வாயு என்னும் காற்றுக் கடவுள் செய்யும் இரக்கமற்ற கொடுமைகளை எவ்வாறு பொறுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது என்பது பற்றியும், இந்த வாயு தங்களை எப்படியெல்லாம் சித்திரவதை செய்கிறார், இங்குமங்கும் அலைக்கழிக்கிறார், சிதற அடிக்கிறார், பங்கப்படுத்துகிறார் என்பவை பற்றியும் மூத்த மற்றும் தலைவர்களாயிருக்கிற கொசுக்கள் காரசாரமாகப் பேசின.

''காற்றுக் கெதிராக எதுவும் செய்ய முடியாதபடி பிரம்மா நம்மைப் படைத்திருப்பதற்கு நாம் என்ன பாவம் செய்தோம்? எதற்காக அவர் காற்றுக்கு இப்படி நம் மேல் சர்வாதிகாரம் செய்யும் அதிகாரத்தைக் கொடுத்தார்? நாம் நம் பிரதிநிதிக் குழுவைப் பிரம்மாவிடம் அனுப்பி முறையீடு செய்ய வேண்டும்'' என்று ஒரு பேச்சாளிக் கொசு கூறியது.

''பிரம்மாவின் ஓரவஞ்சனையால் நமக்கு ஏற்பட்டிருக்கும் துன்பத்தை அவருக்குச் சொல்ல வேண்டியது நம் கடமை. மனித உடலிலிருந்து இரத்தத்தைக் குத்தி எடுக்கும் வலிமையான அவயவத்தை நமக்கு அவர் தந்திருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் மூட்டைப்பூச்சிகளையும் நம்மைப் போலத்தான் படைத்திருக்கிறார். நம் பரிதாபமான நிலையையும், மூட்டைப்பூச்சிகளுக்குப் பிரம்மா அளித்துள்ள பெருமையான சலுகையையும் ஒப்பிட்டுப் பாருங்கள். மூட்டைப்பூச்சி மனிதனின் படுக்கையிலேயே ஒரு மூலையில் ஓய்வு எடுத்துக்

கொள்கிறது. அவன் தூங்கும்போது அவனறி யாமல் அவனைக் கடித்து, தனக்கும் ஒரு ஆபத்து மில்லாமல் இரத்தத்தைக் குடிக்கிறது. மனிதன் அதனைக் கண்டுபிடித்துவிட்டான் என்பதை அறிந்து கொள்ளும் சக்தி அதற்கு இருக்கிறது. இறந்து போய்விட்டது போலப் பாவனை செய்து அவனது தண்டனையிலிருந்து தப்பிவிடுகிறது. ஆனால் நமக்கு அப்படிப்பட்ட பாதுகாப்பு எதுவும் அளிக்கப்பட வில்லை. ஆகவே பிரம்மா நமக்குத் தொல்லை தரவே காற்றைப் படைத்திருக்கிறார். வேண்டு மென்றே இந்தத் தொல்லையைச் செய்திருக்கிறார். ஆகவே நாம் நேராகப் பிரம்மாவிடம் சென்று இந்த அநீதியைக் கடுமையாக எதிர்க்க வேண்டும். இது மிக அவசரம்'' என்று இன்னொரு `கொசு வற்புறுத்தியது.

ஆகவே அவை பிரம்மனிடம் சென்று தங்கள் வழக்கை எடுத்துக் கூறின. பிரம்மா அவர்களது குற்றச்சாட்டைப் பொறுமையுடன் கேட்டார். உடனடியாக காற்றுக் கடவுளைப் பதவியிலிருந்து நீக்கவேண்டும் என்று கொசுக்கள் அறிவித்தன. பிரம்மா ''எவ்வளவு குறுகிய நோக்கங் கொண்டுள்ளன இவை! எல்லா உயிர்களுக்கும் இன்றியமையாத காற்றைக் கொண்டு செல்லும் பணியை காற்றுக் கடவுள் செய்துவருகிறார். இந்தக் கொசுக்களும் காற்றில்லாமல் உயிர் வாழ முடியாது. ஆனாலும் வாயுவின்மேல் இவை களுக்குள்ள பழி உணர்ச்சி காரணமாகத் தங்கள் அழிவைக்கூட ஏற்கத் தயாராக இருக்கின்றன. இருண்ட காட்டுப் பாதையில் கைவிளக்குடன் சென்று கொண்டிருந்த ஒருவன், இன்னொருவன் தன் கைவிளக்கு வெளிச்சத்தின் துணையால் தன்னைத் தொடர்ந்து வருவதைக் கண்டு தன் விளக்கை அணைத்துவிட்டுத் தானும் இருட்டில் நடந்த

முட்டாள்தனமான செயலைப்போல இக் கொசுக்களின் செயல் இருக்கிறது. முட்டாள்தனம் என்பது மேலும் முட்டாள்தனத்தைத்தான் வளர்க்குமா ?'' என்று எண்ணினர்.

பிரம்மா கொசுக்களைப்பார்த்து, ''காற்றுக் கடவுள் பற்றி நீங்கள் கூறிய புகார்களைக் கேட்டேன். இரு கட்சிக்காரர்களையும் கேட்டறிந்த பின்தான் முடிவு சொல்ல வேண்டும் என்பது நீதி. இப்போதே காற்றுக்கடவுளை அழைத்து அவரைக் கேட்கிறேன். பொறுத்திருங்கள். உங்கள் விஷயத்தை சரி செய்துவிடுகிறேன்'' என்ருர்.

தன் முன் வரும்படி காற்றுக் கடவுளுக்குப் பிரம்மா கட்டளையிட்டார். காற்று அவர் முன் தோன்றும் போதே கொசுக்கள் அடித்துச் செல்லப்பட்டுவிட்டன. அவை மறைந்து போயின.

''வணக்கம் பிரபு,'' என்று காற்றுக் கடவுள் வணக்கம் சொன்னர்.

''வாயு ! விசேஷம் ஒன்றுமில்லை. நீ உன் கடமைகளைச் சரியாகச் செய்து வருகிருயா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளவே அழைத்தேன்''.

ஆம் பிரபு ! என் கடமைகளைத் தங்கள் பேரருளால் சரியாகவே செய்து வருகிறேன். கொசுக்களால் பரவும் மலேரியா மற்றும் பிற நோய்கள் பரவவிடாமல் தடுத்திருக்கிறேன். இக் கொசுக்களை அடித்துச் சென்று மக்களுக்கு அவை துன்பம் செய்யாமல் தடுத்திருக்கிறேன். இக் கொசுக்களை சதுப்புப் பகுதிகளுக்கும், அசுத்தமான பகுதிகளுக்கும் கொண்டு போய்ச் சேர்த்துள்ளேன்.

அங்கே அவை அமைதியுடனும், மகிழ்ச்சியுடனும் வாழ முடியும். இறைவா! பாதுகாப்பாகிய தங்களது அருள் எல்லோருக்கும் சமமாகக் கிடைத்து வருகிறது. நான் தங்கள் பணிவுள்ள அடிமை''

''மிக நல்லது. அனைவர்க்கும் நன்மை கிடைக்கட்டும்''.

இறைவனது வழிகள் புரிந்து கொள்ள முடியாதவை. அவர் அனைவர்க்கும் தந்தையாகவும், மேலான பாதுகாப்பாளரும் ஆவார். அவரது வழிகளைப் புரிந்து கொண்டு அவரைச் சரணடையுங்கள். அமைதியாக வாழுங்கள். எப்போதும் குறைகளைச் சொல்லாதீர்கள்.

# 21. 'கவர்னர்' எனும் அஹங்காரத்தைக் கொல்

ஐரோப்பாவில் ஒரு பெரிய சமஸ்தானத்து கவர்னர் பலவித கெட்ட பழக்கங்களுக்கு ஆளாகி இருந்தார்; திரண்ட செல்வம் உண்டு. சிற்றின்ப வாழ்க்கைக்குரிய சகலவிதமான இன்பங்களையும் அனுபவித்தார். யாராவது அவருடைய செய்கையை ஆட்சேபித்தால், அவருக்கு லஞ்சம் கொடுத்து வாயை மூடிவிடுவார். எவருமே சுகப்படவில்லை. பார்வைக்கு அழகான எந்தப் பெண்ணின் கற்பும் அழிக்கப்படாமலில்லை.

சிலகாலத்தில், அவருடைய சக்திகள் எல்லாம் ஒடுங்கிவிட்டன. வாலிப முறுக்கும் வாய்வீச்சும் வாடி வதங்கின. அவருடைய மனச்சாட்சியே அவரைக் குத்தலாயிற்று. பயங்கரமான பச்சாத்தாபநிலை ஏற்படலாயிற்று. பைத்தியம் பிடித்துவிடக்கூடிய நிலைமையில் இருந்தார். தற்கொலை செய்து கொள்ள விரும்பினார். பரம்பொருள் கருணை பாராட்டி அவருள்ளத்தில் நல்லதோர் எண்ணத்தைப் புகுத்தினார். ஸ்தலத்திலிருந்த மாதாக்கோவில் அதிகாரியிடம் அவர் போனார். ''பிதாவே! நான் தற்கொலை புரிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்று கூறவே, மாதாக் கோவில் அதிகாரி, ''ஏன்? சகோதரா! அப்படி ஒருபோதும் சிந்திக்கக்கூடாது. பிராணன் என்பது கடவுளின் சொத்து. அதைப் போக்கடித்துக் கொள்வதற்கு உமக்கு உரிமை கிடையாது. இப்படிச் சிந்திப்பதற்கு என்ன காரணம் சொல்லும். உம்மை நிச்சயமாய்க் காப்பாற்று கிறேன்'' என்றார்.

கவர்னர், ''இல்லை, ஐயா! தங்களால் முடியாது. நான் ஓர் மஹாபாபி. தங்கள் முன்னிலையில் அடியேன் செய்த பாபச் செயல்களை எல்லாம் ஒத்துக்கொள்கிறேன். என்னைக் காப்பாற்றுவதற்குத் தாமதம் இல்லாமற் போகும். எல்லாவிதப் பாபங்களையும் நான் செய்துவிட்டேன். இப்போது, எனக்கு அமைதியான மரணம் வாய்க்கட்டுமென்று எனக்காகப் பிரார்த்தனை பண்ணுங்கள்'' என்று மன்றாடினான்.

மாதாக்கோவில் அதிகாரி, ''கடவுள் கருணை வாய்ந்த எங்கள் பிதா. நான் உம்மைக் காப்பாற்று கிறேன். மனப்பூர்வமாய் உற்றுக்கேளும். ஆனால் உம்மைச் செய்யச் சொன்னபடி தவறாது செய்வீரா?'' என்று கேட்டார்.

''ஓ! நான் காப்பாற்றப்படுவேன் என்று தாங்கள் கருதுகிறீர்களா? நிச்சயமாய், தங்களுடைய கட்டளைப்படி எழுத்துக்கெழுத்து நடந்துகொள்கிறேன். இதனால் எனக்கு என்ன நஷ்டம் வந்துவிடப்போகிறது'' என்றார் கவர்னர்.

மாதாக்கோவில் அதிகாரி, ''சனிக்கிழமை தோறும் மாதாக்கோவிலுக்கு வெளியே நில்லும். மாதாக்கோவிலுக்குப் போகிற எவரையும் ஆண், பெண், குழந்தை அல்லது நாய்கள், கழுதைகளானாலும் சரி — தலை வணங்கிக் கேட்டுக் கொள்ளும். ஒவ்வொருவரிடத்திலும், 'மாதாக் கோவிலில் தயவு செய்து எனக்காகப் பிரார்த்தனை பண்ணுங்கள். மகா தீய உள்ளம் படைத்த பாபி நான்' என்று சொல்லுவீர். இதன்படி செய்வீரா'' என்றார்.

கவர்னருக்குத் தூக்கிவாரிப்போட்டது. தன் ஆட்சிக்குட்பட்ட குடிமக்கள் முன்னிலையில் எப்படித் தலைவணங்கி விவரத்தைச் சொல்வது? எப்படியிருந்தபோதிலும், அவர் துன்புறுகிறபடியால் கோவில் அதிகாரி சொன்னபடி செய்வதாக ஒப்புக்கொண்டார்.

இப்படி ஏழு வருடங்கள் கடந்தன. தான் கவர்னர் எனும் அஹங்காரம் பூரணமாய்ப் போய் விட்டது; அவர் தெய்வீக மனிதராக மாறி விட்டார். அவருக்கு ஆச்சரியகரமான சக்திகள் அமையலாயின. இப் பூமியில் பிரத்தியக்ஷமான கடவுளாகவே மாறி விட்டார்.

# 22. மாயை செய்யும் தந்திரம்

மகேந்திரகிரி யோகியார் தமது சீடன் பிரகாஷ் சைதன்யனை யோகத்தின் இரகசியங்களைக் கற்றுக் கொள்ளும்படியாக அறிவுறுத்தினார். "பிரகாஷ்! செல்வம் (பொருள்), பெண், புகழ் ஆகிய மூன்றைப் பற்றியும் நீ மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அவற்றிலிருந்து தூர விலகியிரு. அவை உன்னை யோகத்தின் உன்னத நிலையிலிருந்து சம்சார சாகரத்தில் கண்ணிமைக்கும் நேரத்தில் தள்ளி விடும். மனதுக்கு அதிசய சக்திகள் உண்டு. மாயையின் மறு பெயர்தான் மனம். இது தந்திர சாலியாகும். என்ன நடக்கிறது என்பதை நீ அறிய முடியாதபடி உன்னை ஏமாற்றும். நீ எப்போதும் விழிப்போடும், எச்சரிக்கையோடும் இருக்க வேண்டும். அழிவுக்கு நடத்திச் செல்ல மனதுக்கு நீ இடந்தரலாகாது. எப்போதும் 'ஆனால்' என்னும் சொல்லைச் சொல்லாதே. அதில் ஆபத்து உள்ளது" என்றார்.

பிரகாஷ் கீழே விழுந்து யோகியாரை வணங்கி அவ்விடம் விட்டு அகன்றான். "குருதேவர் கூறியது சரி. இந்தக் கிராமத்தில் நான் இனி இருக்க மாட்டேன். வடக்கே ஒரு மைல் தூரம் சென்று காட்டில் தனியே சாதனையைத் தீவிரமாக மேற் கொள்வேன். எந்தத் தீமையும் என்னை அணுகாது" என்று நினைத்தான்.

மிக அக்கறையுடன் சாதனைகளைச் செய்து வந்தான். ஒரு நாள் காலை பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருக்கும்போது மண்ணுக்கடியில் ஏதோ மின்னுவதைக் கண்டான். கொஞ்சம் மண்ணைத் தோண்டிப் பார்த்தான். விலை மதிக்க முடியாத

வைரக் கற்கள் புதையலாகக் குவிந்திருப்பதைக் கண்டு அதிசயித்தான். குருநாதரின் அறிவுரை நினைவுக்கு வந்தது. ''குருநாதர் செல்வத்தைப் பொறுத்தவரை எச்சரிக்கையாக இருக்குமாறு சொல்லியிருக்கிறார். இந்தப் புதையல் எனக்கு வேண்டாம். இதனால் எனக்கு ஆகப் போவது ஒன்றும் இல்லை. ஆனால் இப்புதையலை வைத்து ஒரு கோவில் கட்டினால் குருநாதர் மகிழ்வார். அவரது சத்சங்கத்தை இங்கே அவர் நடத்தலாம். பலர் பயனடைவார்கள். இதை நான் தொடக் கூடாது. இதை எப்படிச் செலவிடுவது என்று யோசிக்கலாம்'' என்று நினைத்தான்.

கட்டிட ஒப்பந்தக்காரர்களைக் கலந்து யோசித்தான். அவர்கள் கோவில் கட்டத் தயாராயிருந்தார்கள். பணத்துக்கு என்ன செய்வது என்று கேட்டார்கள். ''என்னுடன் வாருங்கள் பணத்துக்கு என்ன செய்வது என்று காட்டுகிறேன்'' என அவர்களைப் புதையல் இருக்குமிடம் அழைத்துச் சென்று காட்டினான். இப்போது நீங்கள் வேலையைத் தொடங்கலாமல்லவா என்றான்.

அவர்கள் மிகவும் தந்திரசாலிகள். இந்த முட்டாள் சாதுவை ஒழித்துவிட்டால் இந்தப் புதையலைத் தம் விருப்பம் போல அனுபவிக்கலாம் என்று கருதி அவர்கள் பிரகாஷின் கை கால்களைக் கட்டி காட்டினுள் போட்டுவிட்டுப் புதையலை எடுத்துக் கொண்டு ஓடிவிட்டார்கள்

''குருதேவர் சொன்னது சரியே. இந்தப் புதையலை நம் விருப்பப்படி பயன்படுத்த வேண்டும் என்ற ஆசைக்கு அடிமைப்பட்டிராவிட்டால் இந்த நிலை எனக்கு ஏற்பட்டிருக்காது. இங்கிருந்து எந்த

ஆசையும் என்னைத் தாக்க முடியாதபடி வேறெங்காவது தூரப் பிரதேசத்துக்கு காட்டிற்குள் சென்றுவிட வேண்டும்'' என்று கருதினன்.

அவ்வழி வந்த வழிப்போக்கர் ஒருவர் அவன் கட்டுகளை அவிழ்த்துவிட்டார். பிரகாஷ் காட்டினுள் ஓடினன். அங்கு ஓரிடத்தில் தீவிரமாக சாதனைகளைத் தொடங்கினன்.

ஒரு நாள் காலை ஓர் அழகான பெண் அவனை நாடி வந்தாள். மிகத் துயரத்தில் ஆழ்ந்தவளாகக் காணப்பட்டாள். பிரகாஷை வணங்கினள்.

''சகோதரி! உனக்கு என்ன வேண்டும்''? பிரகாஷ் கேட்டான்.

''நான் உங்களைத்தான் தேடி வந்தேன். உங்களைக் கண்டதும் என் இதய தாகம் தீர்ந்து விட்டது'' என்றாள் அவள்.

''என்னை உனக்கு எப்படித் தெரியும்?'' பிரகாஷ் வினவினன்.

''உங்களை என் கணவராக வரித்துவிட்டேன்'' பெண் பதில் சொன்னாள்.

''இல்லை, இல்லை! நான் உன்னைப் பார்த்ததேயில்லை. வேறெந்தப் பெண்ணையும் பார்த்ததேயில்லை. பெண்களிடம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று குருதேவர் எச்சரித்திருக்கிறார். இங்கிருந்து உடனே போய்விடு'' என்று பிரகாஷ் கூறியதும் அப்பெண் பதில் கூறலானாள், ''சுவாமி! உங்களை யோக நிலையிலிருந்து இறக்க விரும்பவில்லை. உங்களுக்குத் தொண்டு செய்கிறேன். உணவு

சமைக்கிறேன். உங்கள் குடிசையைச் சுத்தம் செய்கிறேன், தயவு செய்து நான் இங்கே தங்க அனுமதி கொடுங்கள்''.

''முடியாது, முடியாது. நீ உடனே இங்கிருந்து போய்விடு. இல்லையானல் நான் போய்விடுகிறேன்'' என்று பிரகாஷ் கண்டிப்புடன் கூறினன்.

அந்தப் பெண் அங்கிருந்து அகன்ருள். ஆனல் அன்று பிற்பகலிலிருந்து பிரகாஷின் குடிசைக்கு அவன் வரும் முன்பாக வந்து, கூட்டிப் பெருக்கி விட்டுப் போய்விடுவாள். யாரோ குடிசையைப் பெருக்குகிருர்கள் என்பதைப் பிரகாஷ் கவனித் தாலும் அதைப் பொருட்படுத்தாமலிருந்தான். நாளாக ஆக பிரகாஷ் வந்த பின்னும் அவள் சில நிமிஷங்கள் குடிசையில் தங்கியிருந்துவிட்டு ஆனல் எதுவும் பேசாமல் செல்லத் தொடங்கினள். அதற்குப் பிறகு அவனுக்கு ஏதாவது சாப்பிடு வதற்குக் கொண்டுவர ஆரம்பிக்கவே இருவரிடை யிலும் நட்பு வளர்ந்தது.

இவளது நல்ல நோக்கங்களைப் புரிந்து கொண்டேன். இவள் எனக்குத் தீங்கு செய்ய வரவில்லை. ஒரு மகாத்மாவுக்குத் தொண்டு செய்ய அவள் விரும்பினல் நான் ஏன் தடுக்க வேண்டும்? இதனல் தியானம் செய்ய இன்னும் அதிக நேரம் கிடைக்கும்'' என்று பிரகாஷ் நினைத்தான்.

உண்மையில் என்ன நேருகிறதென்பதை அவன் உணர முடியாதபடி இவர்கள் நட்பு காதலாக மாறிற்று. ஒரு குழந்தை, பிறகு இன்னென்று, மற்றென்று என்று குழந்தைகள் பிறந்தன. சில ஆண்டுகளிலேயே அவன் உணராமலேயே யோக

நிலையாகிய மலையிலிருந்து சம்சாரமாகிய மடுவில் வீழ்ந்தான்.

ஓ! இது என்ன! நான் அழிந்துவிட்டேன். குருதேவரது கூற்று முற்றிலும் சரி. இங்கிருந்து நான் வேறெங்காவது ஓடி மறைந்து கொள்ள வேண்டும்'' என்று எண்ணினான்.

ஆகவே ஒரு நாள் குடும்பத்தைத் துறந்து அடர்த்தியான காட்டுக்குள் சென்று மறுபடியும் சாதனையைத் தொடங்கினான். நாளடைவில் மந்திர யோக சாதனையின்மூலம் சில சித்திகளைப் பெற்றான். ஒரு நாள் மிகுந்த வேதனையோடு ஓர் ஏழை அவனிடம் வந்தான். அவன் பல நாள் பட்டினி கிடந்தவன். பட்டினியும், நோயும் அவனை வாட்டிக் கொண்டிருந்தன. அவனிடம் இரக்கம் கொண்ட பிரகாஷ் தன் தாடியிலிருந்து ஒரு முடியைப் பிடுங்கி எடுத்து அந்த ஏழையிடம் கொடுத்து அது அவனுக்கு உணவு தரும் என்று சொன்னான். அந்த ஏழை தன் பெட்டியில் அந்த முடியைப் பத்திரமாக வைத்துக் கொண்டான். அடுத்த நாள் காலையில் அந்தப் பெட்டி நிறைய நாணயங்கள் இருந்தன. பிரகாஷின் புகழ் நாலாபுறங்களிலும் பரவவே அவனை நாடி ஏராளமானபேர் வந்தார்கள். ''இவர்களிடமிருந்து எந்த வெகுமதியும் நான் வாங்கமாட்டேன். எனது வைராக்கியத்தில் உறுதியாக இருப்பேன். இந்த மக்களின் துயரங் களைப் போக்க உதவுவதால் என்ன தீமை வந்து விடப் போகிறது?'' எனக் கருதினான்.

ஒரு நாள் காலை பெரிய மக்கள் கூட்டம் அவனைச் சூழ்ந்து கொண்டது. ஒவ்வொருவரும் அவனது தலைமுடி அல்லது தாடி முடி வேண்டுமென்று கூக்குரலிட்டார்கள். அவர்களது வேண்டுகோளைப்

பிரகாஷால் நிறைவேற்ற முடியவில்லை. மக்கள் அமைதியிழந்து தலை முடிகளையும், தாடி முடிகளையும் இழுக்கத் தொடங்கினார்கள். வலி பொறுக்க முடியாமல் பிரகாஷ் அலறினான். ஆனால் பயன் இல்லை. இரத்தம் பெருக்கெடுத்தது. மயக்க முற்றான். கண் விழித்தபோது தனியே இருப்பதை உணர்ந்தான். ''குருதேவரது அறிவுரை மிகவும் சரியானதே. ''இந்தப் புகழுக்காக நான் ஆசைப் படாதிருந்திருந்தால் இந்தத் துன்பம் எனக்கு வந்திருக்காது'' என்று வருந்திய அவன் மீண்டும் காட்டின் நடுப்பகுதிக்குச் சென்று அகண்ட மௌனத்தை மேற்கொண்டு சாதனையைத் தொடங்கினான்.

# 23. இலக்ஷ்மணபுரி பட்டதாரி

தன் படிப்பின் திறமை பற்றி ஒவ்வொருவருடைய கவனத்திலும் பதியவைக்க வேண்டுமென்ற எண்ணம் ஓர் இளம் வாலிபனுக்கு உதித்தது; ஆகையால் அவன் பெரிய புத்தகங்கள் சிலவற்றைத் தன்னுடன் வைத்துக்கொண்டு அவைகளைப் படிப்பதுபோல் பாசாங்கு செய்தான். ஆனால், உண்மையில் ஆங்கிலத்தை அரை பக்கம் கூட அவனால் வாசிக்க இயலாது. வெளிப் பார்வைக்குப் பெரிய படிப்பாளி என்று பிறர் தன்னைக் கருதும்படி நடித்தான். ஒவ்வொருவரும் அவனை ஒரு பட்டதாரி என்றே நினைத்தனர்.

அண்டை வீட்டார் ஒருவருக்கு ஒருநாள் ஒரு தந்தி வந்திருந்தது. அவனுக்கு தந்தியை வாசிக்கத் தெரியாததால், இந்த இளம் போலி பட்டதாரியை அண்டி தமக்குப் படித்துக்காட்டும்படி கேட்டுக் கொண்டார். பட்டதாரி தான் அகப்பட்டுக் கொண்டதாகக் கருதினான். ஆனால், அவன் மகா தந்திரசாலி. ''இப்போது நான் என்ன செய்யலாம்?'' என்று கடுமையாகச் சிறிதுநேரம் சிந்தித்தான். அண்டை வீட்டாரை கூப்பிட்டு, ''தந்தி எங்கிருந்து வந்திருக்கிறது?'' எனக்கேட்க, அவர் ''கல்கத்தாவிலிருந்து'' என்று பதிலளித்தார்.

''ஓஹோ! அதனால்தான் இதை படிக்க முடியவில்லை. நான் இலக்ஷ்மணபுரி பல்கலைக் கழகத்தின் பட்டதாரி'' என்றான். படிப்பில்லாத அண்டைவீட்டன்பர் அப்பால் போய்விட்டார்.

சில ஆத்மீய வஞ்சகர்களின் நிலையும் இப்படித் தான் இருக்கிறது. மிக்க புலமை வாய்ந்ததுபோல நடிக்கும் அவர்களுக்கு சில கலைகளிலும்கூட ஒன்றுமே தெரியாது. ஆனால் அவர்கள் பல வகைகளிலும் தாக்குண்டு அவஸ்தைப்பட்டாலும், எப்படியோ அவர்கள் தப்பித்துக்கொள்கிறார்கள். அவர்களைப்பற்றி எச்சரிக்கையாயிருங்கள் !

ஓம் தத் ஸத்.

# 24. "ஈஸ்டர்" வெகுமதி

ஜோஸப் பார்மன் என்பவர் திராக்ஷரசக் கள்ளை விற்று நல்ல பணக்காரர் ஆனார். மனிதனுடைய பலவீனத்தின் மேல் கள்ளுக் கடையில் ஏறிய விற்பனையின் வாயிலாக அவர் நாணயங்களை அச்சிட்டவர் போன்று பெருஞ் செல்வந்தர் ஆனார்.

மிகக் கல்நெஞ்சம் படைத்தவர். யாருக்காவது ஓர் பென்னி (ஒரு அணா மதிப்புப் பெறுமான ஆங்கில நாணயம்) கொடுத்தால், அவனிடமிருந்து ஒரு 'சவரன்' பெறுமான வேலையை வாங்கி விடுவார். ஜேம்ஸ் கைண்ட்ஹார்ட் என்பவர் ஜோசப் அவர்களின் தாயாதி. அவர் மிக்க ஏழை. ஜோசப்பிடமிருந்து அவர் மாதாமாதம் ஒரு சவரன் பெற்றுவந்தார். அதற்குப் பதில், ஜோஸப்பிற்காக அடிமையைப்போல் உழைத்து வருவது வழக்கம்.

ஈஸ்டர் பண்டிகையின்போது, ஜோசப்பிடமிருந்து ஜேம்ஸ் ஒரு சவரன் பெற்றான். நிரம்பவும் சந்தோஷப்பட்டவனாய், ஒவ்வொருவனுக்கும் இனிப்புப்பண்டங்களை வழங்குவதற்காகக் கடைக்கு வாங்கப் போனான்.

ஜோஸப்போ மதுபானம் செய்துவிட்டுப் படுக்கையறையில் உறங்கிக்கொண்டிருந்தார். தமது பக்கத்தில் யாரோ புதியவர் ஒருவர் இருக்கக் கண்டார். அவர் ஜோஸப்பை அழைத்தார். ஜோஸப் எழுந்தார். ஆனால் அவருடைய உடல் இருந்த இடத்திலேயே இருந்தது. அவருடைய சூக்ஷ்ம உடல் மட்டுமே எழுந்தது.

அந்தப் புதியவர் ஜோஸப்பை ரக்ஷிக்கிற தேவ தூதர். அவர் ஜோஸப்பை வில்லியம் பூவர்பாய் என்பவருடைய வீட்டிற்கு முதலில் அழைத்துச் சென்றார். இந்த வில்லியம் என்பார், ஜேம்ஸ் அவருடைய அந்தரங்க நண்பர். அவர் ஈஸ்டர் பண்டிகையைக் கொண்டாட முடியாத அவ்வளவு பரம ஏழை. அவருடைய குடும்பமோ பெரியது. இதை ஜேம்ஸ் கண்டறிந்து கொண்டார். ஆகை யால், வில்லியம் என்பவருடைய குழந்தைகளுக்கு இனிப்புப் பண்டங்களும் இதர வெகுமதிகளும் வழங்கவேண்டுமென்று ஜேம்ஸின் இதயம் வலி யுறுத்தியது. இந்த அறச் செயலினால் அனைவரும் பரம சந்தோஷப் பட்டார்கள். ஜேம்ஸ் கைண்ட் ஹார்ட் என்பவரை அவர்கள் புகழ்ந்து பேசினார்கள். அவருடைய கரங்களை நன்றிப் பெருக்கினால் முத்த மிட்டார்கள். அவரைச் சுற்றிலும் ஆடி நர்த்தனம் பண்ணினார்கள். ஜேம்ஸ் கூட அவர்கள் மத்தியில் மகிழ்ச்சி அடைந்தார். அந்த வேளையில் பணத்தை சம்பாதிக்கக் கூடிய ஒரு மாத அடிமைத்தனமாகிய கடினமான உழைப்பைப்பற்றி முற்றிலும் மறந்தே போனார்.

அப்பால், தேவதூதர் ஜோஸப்பை மாதா கோவிலுக்குக் கூட்டிச் சென்றார். அங்கு விருந்து அளிக்கப்பட்டிருந்தது. அந்த மாதாக் கோவி லுக்குள் தங்கி ஒவ்வொருவரும் பக்திசிரத்தையோடு பகவானைப் பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள். ஜோஸப் அந்த மாதாக்கோவிலுக்குள் நுழையக்கூட முடியவில்லை, ஏனெனில் அவரைச் சுற்றி கருப்பு தேஜஸ் ஒன்று தென்பட்டது. இவருக்குப் பிசாசு பிடித்திருந்தபடியால், மாதாகோவில் வாசல்களைக் காவல் காக்கும் தேவதூதர்கள் இவரை உள்ளே அனுப்பவில்லை. அவர் தமது சரீரத்திற்குள் திரும்ப

ஓட விரும்பினார். தேவதூதர் மறைந்தார். அவர் சரீரத்தில் புகுந்துகொண்டு எழுந்தார்.

சூக்ஷ்மச் சூழ்நிலைகளில் நடைபெற்ற எல்லா நிகழ்ச்சிகளையும் நினைவுக்குக் கொணர்ந்தார். உடனே தமது பெட்டியிலிருந்த பணத்தை எடுத்துக் கொண்டார். வில்லியம் வீட்டை நோக்கி ஓடிப் போனார். வில்லியத்திற்கும் ஜேம்ஸ் என்பவருக்கும் பெருந் தொகைகளை வாரி வழங்கினார். மாதா கோவிலுக்குப் போனார். கண்ணீர் மல்கக் கசிந்துருகிப் பிரார்த்தித்தார். எல்லோருக்கும் வியப்பு உண்டாயிற்று. அவருக்குப் பைத்தியம் பிடித்திருக்குமோ என்று அவர்கள் கருதினார்கள். கள்ளுக் கடை வியாபாரத்தை நிறுத்தினார். மாதா கோவில் ஒன்றை நிறுவினார். எல்லோரும் அவரைப் புகழ்ந்து போற்றினார்கள்.

# 25. ஓ! எனது உலாவுகோலே

சேட் கிரிதாரிலால் கங்கையில் நீந்திக் கொண்டிருந்தார். சிறிது தூரத்தில் ஏதோ மிதந்து கொண்டிருப்பதைக் கண்டார். அந்த இடத்திற்கு விரைவாக நீந்தினார். அது ஓர் அழகான உலாவுகோல். பாலத்தின்மேல் போய்க் கொண்டிருந்தவர்களில் எவராவது ஒருவர் அதை ஞாபகப் பிசகாகத் தவற விட்டிருப்பார். அதை எடுத்துக்கொண்டு கரையை நோக்கி நீந்தத் தொடங்கினார். வழி நடுவில் நீர்ச் சுழலில் அகப்பட்டுக் கொண்டார். அதிலிருந்து தப்பித்துக் கொள்ள முயலும்போது, உலாவுகோலை இழந்து விட்டார்.

கரைக்கு வந்து சேர்ந்ததும், உரக்க அழுது தலைமேல் அடித்துக்கொண்டார். தலைமயிரைப் பிய்த்துக்கொண்டார். விரைவில் கூட்டம் கூடிற்று. ஓர் சந்நியாசி வந்து அழுகைக்குக் காரணம் என்ன என்று கேட்டார். ''ஓ, மஹானுபாவா! என்ன சொல்வேன்! ஓர் பொக்கிஷத்தை இழந்து விட்டேன். கங்கையில் என்னுடைய உலாவுகோலை இழந்துவிட்டேன்'' என்று பதில் கூறினார் சேட். சந்நியாசி, ''சேட் ஐயா! தங்களுடைய உலாவுகோலா? தாங்கள் கங்கைக்கு வரும்போது பார்த்தேன். கையில் உலாவுகோல் காணப்படவில்லையே!'' என்று கூறினார். அப்பால், மகா கோரமாய் அழுதுகொண்டே கிரிதாரிலால் நடந்த விவரங்களையெல்லாம் நவின்றார். ''ஹே, அறிவில்லாத சேட்டே! அதை எப்படி 'என்னுடைய' உலாவுகோல் என்று சொல்கிறீர்கள்? கங்கையில் அது மிதந்துகொண்டுதான் போயிற்று. இப்போது கூட அது மிதந்து கொண்டே போகிறது. இடையில்

அதன்மேல் தாங்கள் கை வைத்தீர்கள். யார் தங்களை அப்படிச் செய்யச் சொன்னது? அதைத் தங்கள் கையில் இரண்டு நிமிடங்கள் வரை பிடித்துக் கொண்டிருந்த காரணத்தால், அதை உங்களுடைய தாகக் கூறிக்கொள்ளும் உரிமையைப் பெற்று விட்டீர்களா? என்று நன்ருக விளாசிவிட்டார். அங்கிருந்தவர்கள் எல்லோரும் சேட்டின் அஞ்ஞானத்திற்காகச் சிரித்தார்கள்.

ஆனால், சிரிப்பதற்கு எதுவும் கிடையாது. உலகத்திலுள்ள ஒவ்வொருவரும் கிட்டத்தட்ட இதே அஞ்ஞான இனத்திலேயே இருந்து வருகிருர்கள். எதையும் மனிதன் கொண்டுவர வில்லை; இந்த உலகில் தனது வாழ்க்கையின்போது உருவாக்கிய சம்ஸ்காரங்களைத் தவிர, வேறு எதையும் அவன் கொண்டு போவதில்லை. மனைவி, மகன், செல்வம், பெயர், கீர்த்தி, — எல்லாம் அவனைவிட்டு ஓர் நாள் வெளியேறிவிடும். அவைகள் யாவும் ஜனனம் என்கிற எதிர்பாராத நிகழ்ச்சியின் வாயிலாக வந்து சேர்ந்தவைகள்; இந்த க்ஷண நேரத் தொடர்பின் நிமித்தம் மனிதன் 'என்னுடையது' என்று உரிமை பாராட்டுகிருன். அதுதான் அவன் அடைகிற துக்கத்திற்கு காரணம். ஞானோதயம் ஆகி சகலவற்றையும் துறந்தவுடனேயே, அவனுக்குச் சுதந்திரமும் சாந்தியும் சித்தியாகின்றன.

# 26. எல்லா இன்பங்களும் இறுதியில் துன்பமானவை !

ஓர் காட்டில் முனிவர் ஒருவர் வசித்து வந்தார். அவருடைய மஹிமை எங்கும் பரவியிருந்தது. மக்கள் பலரும் அவரைத் தரிசிக்கச் சென்றார்கள். இதையறிந்தவுடன், ஓர் அரசனும் அவரை தரிசிக்கச் சென்றான். அன்புக்கும் மரியாதைக்கும் அறிகுறியாக, அந்த அரசன் அம் முனிவர் பெருமானுக்கு சித்திர வேலைப்பாடுகள் கொண்ட ஒரு ஜோடி பாதரட்சைகளைப் பரிசளித்தான். அம் முனிவர் ''ஓ, அரசே ! விலையுயர்ந்த தங்கள் பாதரட்சைகளை நான் விரும்பவில்லை. அவை இல்லாமலேயே நான் நிரம்பவும் மகிழ்ச்சியடைகிறேன். எவனாவது வந்து அவைகளைத் திருடிக் கொண்டு போகக்கூடிய அவ்வளவு கவர்ச்சிகரமாய் அவை காட்சியளிக்கின்றன. அவைகளுக்குக் காவலாளி ஒருவனை நான் நியமிக்க வேண்டிவரும்'' என்றார். அதற்கு அரசன் ''தங்களுக்கு ஓர் காவலாளியை அனுப்பிவைக்கிறேன்'' என்று நயமாகக் கூறினான். ''இந்த பாதரட்சைகளை போட்டுக் கொண்டு நான் நடந்து சென்றால், ஜனங்கள் என்னைப் பார்த்து பரிகாசமாய் நகைப்பார்கள். சவாரி செய்வதற்கு குதிரை ஒன்று தேவைப்படுமே'' என்று எதிர்காலமுணர்ந்த அம் முனிவர் பகர்ந்தார்.

அதற்கு அரசன், ''உங்களுக்கு நான் குதிரை ஒன்றைத் தருகிறேன்'' என்று கூறினான். உடனே அம்முனிவர், தமக்கும், குதிரைக்கும், குதிரைப் பாகனுக்கும் உபயோகமாகும்படி பங்களா ஒன்று தேவைப்படுமென்று மேலும் கூறினார். ''தங்களுக்கு நல்லதோர் பங்களாவைத் தருகிறேன்'' என்றான்

அரசன். பின், முனிவர் ''எனக்கு பங்களா இருந்தால் என்னைச் சந்தோஷப்படுத்த ஓர் மாது தேவையாகும்'' என்றார். பெண்ணையுங்கூட நியமிக்க அரசர் வாக்குறுதி பண்ணினார். ''அப்பால், எனக்குக் குழந்தைகள் பிறக்கும்'' என்றார் முனிவர். ''உங்களுடைய குழந்தைகளைப் பாதுகாப்பதற்கு ஏவலாட்களை நியமிக்கிறேன். அதற்காகக் கவலைப்பட வேண்டாம்'' என்றார்.

முனிவர் அரசனைப் பார்த்து, ''குழந்தைகள் இளம் வயதிலேயே இறந்தால், யார் அழுவார்கள்?'' என்று கேட்டார். அதற்கு அரசன் ''வேறு யார் அழுவார்கள்?'' தாங்களே அழவேண்டிவரும்'' என்றார்.

பின் முனிவர், ''இப்போது இக்காட்டிலே எவ்விதமான கவலைகளும் தொல்லைகளும் இல்லாமல் சதாசர்வகாலமும் நான் குஷியாக இருந்து வருகிறேன். ஆகையால் குழந்தைகளுக்காக அழவாவது அல்லது அவ்வளவு பொறுப்புக்களைச் சுமக்கவாவது நான் விரும்பவில்லை. தங்களுடைய பாதரட்சைகளைத் தயவு செய்து எடுத்துக்கொள்ளுங்கள்'' என்று முடிவாகக் கூறினார்.

எல்லா இன்பங்களும் இறுதியில் வருத்தத்திற்கும் துன்பத்திற்குமே வழிகாட்டுகின்றன என்பது அரசனுக்கும் முனிவருக்கும் இடையே நிகழ்ந்த இச் சம்பாஷணையினின்று தெளிவாகத் தெரிகின்றது. ஒரு பொருளுக்காக ஏற்பட்ட ஆசையானது எண்ணிறந்த

துயரங்கள் நிறைந்த ராஜ்யத்திலே உன்னைப் புகுத்தி விடும். பூலோகத்திலுள்ள பொருள்கள் யாவும் கவலைகளை உற்பத்தி செய்யக்கூடியவை; பூலோகச் சம்பந்தப்பட்ட எந்த வஸ்துவும் சகல துயரங்களுக்கும் கருப்பையாக அமைகிறது. உலகாயத உடைமைகளால் என்ன பயன்? நீ பெரிதும் விரும்புகிற ஸாந்தியையோ உனக்குத் தேவைப் படுகிற திருப்தியையோ, நீ அவாவுகிற பேரானந்தத்தையோ, அவைகளால் கொடுக்க முடியாது.

# 27. மிக மிகக் குறைந்த சுமை!

''ஹே, பகவானே! உங்களுடைய புத்திரர்களிடத்தில் தாங்கள் கருணையும், நீதியும், அன்பும் பக்ஷபாதமில்லாமல் பாராட்டி வருகிறீர்கள் என்று சொல்லுகிறார்களே! ஆனால் அண்டை வீட்டுக்காரரை கோடீசுவரராயும் என்னை தினசரி சோற்றுக்கு இரவும் பகலும் உழைக்கக் கூடிய ஏழையாயும் சிருஷ்டித்து விட்டீர்களே. நான் என்ன பாவம் செய்தேன்? என்னைக்கூட தாங்கள் கோடீசுவரராகச் செய்யக் கூடாதா?'' என்று பிரார்த்தித்தான் ஜாக்பிரவுன் என்பவன். சிகப்பு திராக்ஷாரசக்கள் ஸ்தாபனத்திற்கு ஜேம்ஸ் மில் போர்டு என்பவர் நிர்வாக மேலதிகாரியாக இருந்தார்; அவனுடைய வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரர் அவர். நிச்சயமாய் அவன் அவர்மீது பொறாமை கொண்டான். பிரார்த்தனை பண்ணினான்; பிரார்த்தனை பண்ணினான். ஒரே உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டான்.

''தாங்கள் யார்? என அவன் கேட்க, ''உன்னை ரக்ஷித்துக் கொண்டிருக்கிற தேவதூதன் நான்! என்னோடு வா'' என்றான் தேவதூதன்.

திராக்ஷை மரச் சோலைகள், நந்தவனங்கள், அரண்மனைகள், பொன்மயமான சாலைகள் ஆகியவற்றின் வழியாக ஜாக்பிரவுன் அழைத்துச் செல்லப்பட்டான். இறுதியில் பெரியதோர் முற்றத்திற்கு வந்து சேர்ந்தான். பல வகைப்பட்ட சிலுவைகள் அங்கே சிதறுண்டு கிடந்தன. சில ரத்தினங்களால் ஆக்கப்பட்டவை. முத்துக்களால் செய்யப்பட்டவை சில. பொன்னினால் இழைக்கப்பட்டவை இன்னும் சில. இதர விலையுயர்ந்த கற்களாலும்

உலோகங்களாலும் தயாரிக்கப்பட்டவையும் உண்டு. இரும்பிஞல் வார்க்கப்பட்ட சிலுவைகளும் மரத்திஞல் செய்யப்பட்டவைகளும் இருந்தன.

''நீ விரும்புகிற ஏதாவது ஒரு சிலுவையை எடுத்துக்கொண்டு அந்த செங்குத்தான மலைக் குன்றுமீது ஏறு. உன்னுடன் அந்தச் சிலுவையும் இருக்க வேண்டும். குன்றின் உச்சிக்குப்போய் சேர்ந்தவுடன், சிலுவை எதஞல் செய்யப்பட்டதோ அதே பொருளைக் குவியலாகப் பெறுவாய். நான் போகிறேன். உச்சியில் உனக்காகக் காத்துக் கொண்டிருப்பேன். விரைவில் போய் சிலுவை ஒன்றைத் தேர்ந்து எடு'' என்று கூறிவிட்டு, தேவதூதன் குன்றின் உச்சிக்கு எழும்பிஞன்.

ஜாக் பயந்து வியந்தான். அங்கு சிதறிக் கிடந்த அழகான சிலுவைத் தொகுதியை உற்றுக் கவனித் தான். பளபளவென மின்னுகிற வைரத்தாலாக்கப் பட்ட சிலுவைகள் அவனுடைய கவனத்தை ஈர்த்தன. தங்கமோ அவனுடைய இதயத்தில் பல புதிய ஆசைகளைக் கிளப்பியது. வைரங்கள் நன்கு பதிக்கப் பெற்றதோர் சிலுவையண்டை ஓடிஞன். அதைத் தூக்க முயன்ருன்......அந்தோ! அவனுக்கு வெகு பளுவாக இருந்தது அது. அப்பா! அதைக் கீழே போட்டான். பின்பு தங்கச் சிலுவையைத் தூக்க முயன்ருன். அதுகூட நிரம்பவும் பளுவாய் இருந்தது. அதைச் சுமந்து, எங்ஙனம் மலைக் குன்றின்மீது ஏறுவது? சிலுவை சிலுவையாகப் புரட்டித் தூக்கிப் பார்த்தான். மரச் சிலுவை! அது இலேசாயும் அழகாகவும் இருந்தது. அதைச் சுமந்துகொண்டு குன்றின்மீது ஓடிஞன். தேவ தூதன் அவனை வரவேற்ருன்.

''ஓ! மரச்சிலுவையைக் கொணர்ந்தாய். என்ன அவமானம்! ஏனெனில் நீ ஓர் தச்சன். மரக்கட்டை களின்மீது பிரியம், அப்படித்தானே!''

“இல்லை, இல்லை. வைரச் சிலுவையை எடுத்துக் கொண்டுவரப் பிரியப்பட்டேன். ஆனால் அது நிரம்பவும் பளுவாயிருந்தது. இதைத்தான் என்னால் சுமக்க முடிந்தது. இது இலேசாயிருக்கிறது” என்றான் ஜாக்.

“அது ரொம்பவும் சரி. நீ வைரச் சிலுவையைச் சுமந்துகொண்டு வந்திருந்தால், குன்றின் உச்சிக்கே வரமுடியாமற் போயிருக்கும்! இது போலத்தான் உலகில் கோடீஸ்வரனுக்குள்ள பொறுப்புகளைப்போல இல்லாமல் உன்னுடையவை வெகு வெகு அற்பம். அவனைப்போல் பாவங்களைப் பண்ணுவதற்கு உனக்கு அவ்வளவு வாய்ப்பு கிடையாது. உன் நிலையிலிருப்பது ஓர் வரப் பிரசாதம்! கவலைப்படாதே. கடவுள் உன்னை எங்கு அமர்த்தினாலும் மகிழ்ச்சியுடன் இருப்பாயாக. அவருக்கு நன்றாய்த் தெரியும். இறைவன் உன்னை ஆசீர்வதிப்பாராக!” என்று கூறிவிட்டு தேவதூதன் மறைந்தான்.

ஜாக் பிரவுன் கண்விழித்தான். அவன் தனக்குள் மகா மேலான சாந்தியை உணர்ந்து நிம்மதியாகக் காலங்கழிக்கலானான்.

# 28. குருவின் முக்கியத்துவம்

வயோதிக கிஷோர்லால் மரணத்தறுவாயில் இருக்கிறார். அவருடைய புத்திரர்களில் மூத்தவன் சாந்துலால். அவர்கள் யாவரும் இருபதாம் நூற்றாண்டைச் சேர்ந்த நாகரீகம் வாய்ந்தவர்கள். ஆகையால் அறிவுள்ள கிஷோர்லால், வீண் செலவுகளைச் செய்கிற புத்திரர்களின் குணத்தைக்கண்டு ஓர் யுக்தி செய்தார். ஒரு லக்ஷம் ரூபாய்களை கிஷோர்லால் தமது வீட்டின் முற்றத்தில் தோண்டிப் பத்திரமாய்ப் புதைத்துவிட்டார். தமது புத்திரர்களுக்கு அவசரமாகப் பணம் தேவைப்படும்போது அது பயன்தருமென்பது வயோதிகருடைய எண்ணம்.

கிஷோர்லால் இறந்துபோன பிறகு சொத்துக்களைப் பாழாக்கப் புத்திரர்களுக்குச் சுதந்திரம் கிடைத்துவிட்டதல்லவா! விரைவிலே அவர்கள் பணம் இல்லாமல் கஷ்டப்பட்டார்கள். அகோரமாய் அழுதார்கள். தகப்பனாருடைய இரும்புப் பெட்டியைத் திறந்து, கண்டபடி செலவழித்து பெட்டியைக் காலி செய்தார்கள். கிழட்டுத் தகப்பனாருடைய கணக்குப் புத்தகங்களைச் சோதித்தார்கள் — ஏதாவது நோட்டுகள் உள்ளே வைத்திருப்பாரென்ற நோக்கத்துடன். என்ன ஆச்சரியம்! தஸ்தாவேஜுக்களை ஆராய்ந்துபார்க்கும் போது ஓர் துண்டுக் கடிதம் இருப்பதைக் கண்டார்கள். குதூகலித்தார்கள். ''நமது குடும்பக்கோவிலின் வில்மண்டபத்தில் (Dome) ஒரு லக்ஷம் ரூபாய்களை வைத்திருக்கிறேன். நீங்கள் சித்திரைமாதப் பௌர்ணமியன்று பகல் பத்து மணிக்கு இத்தொகையை எடுத்துக்கொள்ளுங்கள்'' என்று அத்துண்டுக் காகிதத்தில் எழுதப்பட்டிருந்தது. கிழவருடைய இளம் குமாரர்கள் சந்தோஷத்தால்

குதித்து ஆரவாரித்தார்கள். மூட பக்தியுள்ள தங்கள் பிதா புதையலை எடுத்துக்கொள்ளும் தேதியைக் குறிப்பிட்டிருக்கிறாரென்று அவர்கள் கருதினார்கள். அதைச் சட்டை பண்ணவில்லை. கோவிலின் வில்மண்டபத்தை உடைக்கலானார்கள். பெருத்த ஏமாற்றம்! அங்கே ஒன்றுமே இல்லை.

மீண்டும் அகோரமாய் அழுதார்கள். கடைசியில் அவர்கள் தங்கள் மாமாவிடம் போய் நிகழ்ந்தவை யாவும் எடுத்துச் சொன்னார்கள். தங்களுக்கு கொஞ்சம் பணம் தருமாறும் வேண்டினார்கள். மாமா வயோதிகர். சிந்தனை செய்தார் சில நேரம் வரை. கிஷார்லால் எழுதிய சீட்டை ஆழ்ந்து படித்தார். ''இல்லை, இல்லை. இதில் தவறு இருக்க முடியாது. இதை நீங்கள் தப்பர்த்தம் பண்ணிவிட்டீர்கள். நீலவர்ணச் சுவட்டின் துணை கொண்டு மீண்டும் வில் மண்டபத்தைப் பழைய மாதிரியாகவே கட்டி முடியுங்கள். குறிப்பிட்ட நாளிலே என்னிடம் வாருங்கள் பணத்திற்காக. இதோ வில் மண்டபம் கட்டுவதற்குச் சிலவுக்கு ரூ. 3,000'' என்று கூறி, பணம் கொடுத்தார்.

பையன்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. எப்படியானாலும் இந்த வழி தவிர வேறு கதியில்லையாதலால் ஆழ்ந்த வெறுப்புடன் முன்னிருந்தமாதிரியாகவே வில் மண்டபத்தைக் கட்டி முடித்தார்கள். ஒவ்வொரு நாளும் பணம் வேண்டுமென்று மாமாவைத் தொந்தரவு பண்ணினார்கள். ஆனால் மாமா சித்திரை மாதம் பௌர்ணமியன்றே காலை 10 மணிக்கு வாருங்கள். அதற்கு முன்னால் அல்ல'' என்று சொல்லிக் கொண்டே வந்தார். அந்த சித்திரை மாதப் பௌர்ணமி வந்தது. சரியாகக் காலை 10 மணிக்கு அங்கே மாமா வந்தார். வில் மண்டபத்தின் நிழல் எங்கு விழுகிறதோ அங்கே

தோண்டுமாறு பையன்களை உத்தரவிட்டார். அவர்கள் அங்ஙனமே தோண்டினார்கள். கிடைத்தது புதையல் !

மாமா பிறகு, ''சீட்டில் கொடுக்கப்பட்டிருக்கும் தேதி, நேரம் இவற்றின் முக்தியத்துவத்தைப் புரிந்துகொள்வதற்கு உங்களுக்குப் போதுமான சூக்ஷ்ம புத்தி இல்லை. உண்மையான உத்தேசம் எதுவுமில்லாமல் அவற்றைக்குறித்துள்ளார் என்று நீங்கள் கருதினீர்கள். இப்போது, பணத்தை உபயோகிப்பதில் சர்வ ஜாக்கிரதையாயிருங்கள். சொந்த அனுபவம் மூலமாய்க் கற்றுக்கொள்ளுங்கள். அறிவுடையவர்களாக இருங்கள். புத்திசாலித்தனமாய் வாழ்நாளைக் கழிக்கவேண்டும். தெய்வீக வாழ்க்கையை அனுஷ்டித்து, நித்தியானந்தமும், நிஷ்களங்கமான, சாசுவதமான ஸாந்தியும் அனுபவியுங்கள். கடவுள் உங்களை ஆசீர்வதித்து காப்பாற்றுவாராக'' என்று புத்திமதிகளைக் கூறினார்.

குருவில்லாமல் சாதகர்கள் எப்படி சாஸ்திர உபதேசங்களை அனர்த்தம் பண்ணுகிறார்கள் என்பதை இக்கதை விளக்கிக் காட்டுகிறது. நூல்களில் சில சொற்றொடர்கள் காணப்படுகின்றன. மேற்பார்வைக்குத் தோன்றுவதுபோலன்றி, உள்நோக்காக ஆராயுமிடத்து வேறு கருத்தைத் தரும். குரு ஒருவராலேதான் இந்தக் கருத்துக்களை விளக்கி உண்மையான பொருளை தெளிவுபடுத்தக் கூடும். நன்கு சாதனைகளைக் கைக்கொள். இறைவனைச் சாக்ஷாத்கரிக்க வேண்டுமென்று கொழுந்துவிட்டெரியும் அவாவைக் கொள்ளுவாயாக. பிறகு ஒரு முனிவரின் சரணத்தை புகலிடமாகக் கொள். அவரிடம் மெய்ப்பொருளைக் கேள். இமைகொட்டும் நேரத்தில் ஆத்மாவை நீ சாக்ஷாத்கரிப்பாயாக.

# 29. நாற்கால் மனிதன்!

ராபர்ட் என்பவன் ஓர் பெரிய கொலையாளி. எல்லாச் சரித்திரங்களிலும் அவனைப்போல் மகா கொடியவன் எவனும் இருக்கமாட்டான். கேவலம் காலணாவுக்குக்கூட கத்தியால் குத்தி எவனையும் கொலை புரிவான். மனிதன் தலையைத் துண்டித்துக் கொண்டுவராத நாளே இல்லை! புண்ணிய நதி தீரத்திலுள்ள ஓர் குகைக்குள் அவன் ஒளிந்து கொள்வது வழக்கம். கொலை புரிந்துவிட்டு நதியில் மூழ்கி நீந்தி, அக்கரையிலுள்ள குகைக்குப்போய் ஒளிந்து கொள்வான். புண்ணிய நதியில் மூழ்கு வதால் பாவங்கள் யாவும் கழுவப் பெற்றுவிட்டன என்றுகூட அவன் கருதினான்.

அவன் வசித்து வந்த ஊரில் கிருஸ்துவக் கோவில் ஒன்று உண்டு. அதில் எழுந்தருளியிருந்த பாதிரிக் குருதேவரின் சகோதரர் ஜான் என்பவர் தெய்வ பக்தியிற் சிறந்தவர். ஒருநாள் ஜான் என்பவரை ராபர்ட் கொலை புரிந்தான். ஜான் பரம தரித்திரர். கொலை புரிந்ததும், ஜான் வைத்திருந்த பணப் பெட்டியைப் பரிசோதிக் கையில் காலணாகூட இல்லை என்பதைக் கண்ட ராபர்ட்டுக்கு மகா வருத்தமாகப் போய்விட்டது. "கொலை புரிவதற்குமுன் இது தெரிந்திருந்தால்!" என்று எண்ணினான். கொலை நடந்தபின் கவலைப் பட்டுப் பயன்? வழக்கம்போல், புண்ணிய நதியில் மூழ்கிவிட்டுத் தன் குகைக்குள் போய் ஒளிந்து கொண்டான்.

அந்தோ! ஜானின் ஆவியானது ராபர்ட்டைத் தாக்கி அச்சுறுத்தலாயிற்று. ஹா, தெய்வமே!! அவனுடைய வாளுக்கு இரையான பிற ஆவிகளும் அவனைச் சுற்றிக்கொண்டன. தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு ராபர்ட் வெளியே ஓடினுன். முதலில் அவனுக்கு எங்கே போவதென்றே ஒன்றும் புரியவில்லை. நாள்தோறும் புண்ணிய நதியில் மூழ்கிவந்த மஹிமையால், அவனுடைய அந்தராத்மாவில் பதிந்திருந்த ஆன்மீய சக்தியானது அவனுடைய கால்களை மாதாக் கோவிலுக்கே உந்தித் தள்ளின.

''தூய பிதாவே! பெரிய கொலையாளி. நான் பண்ணிய கொலைக் குற்றங்களையெல்லாம் ஒப்புக் கொண்டு, பாவ மன்னிப்புப் பெற விரும்புகிறேன்'' என்று பாதிரிக் குருதேவரை வணங்கினுன்.

''குழந்தாய்! உன் வரவு நல்வரவாகுக. தைரியமாய் இரு. கவலைப்படாதே. சர்வேஸ்வரர் சதா காலமும் சாந்தமும் கருணையும் வழங்க வல்லவர். உன் வரலாற்றைச் சொல்லப்பா'' என்று பாதிரிக் குருதேவர் பகர்ந்தார்.

''பரம பிதாவே! குறைந்த பட்சம் ஒரு நாளுக்கு ஒருவன் வீதம் கொலை செய்துள்ளேன். தங்கள் சொந்த சகோதரரான ஜான் என்பவரை இன்று காலை கொலை செய்தேன். குகைக்குள் போனேன். 'கொலையுண்ட எல்லா ஆவிகளும் என்னைக் கொல்லப் பார்த்தன.' என்னைத் தயவு செய்து காப்பாற்றுங்கள். அரசாங்கத்திற்கு என்னைக் காட்டிக் கொடுத்து, அதன்மேல் என்னைக் கொலைக்குள்ளாக்கினுலுங்கூட அது பற்றிய கவலை இல்லை. நான் தண்டிக்கப்பட வேண்டியவனே.

இப்போது நான் தப்பித்துக்கொள்ள முடியாது. ஆனுல், அதற்குமுன், தயவு செய்து எனக்காகப் பகவானிடம் பிரார்த்தனை பண்ணுங்கள்'' என்று உள்ளம் உருக உரைத்தான் ராபர்ட்.

அதற்குப் பாதிரி குருதேவர் எவ்விதமான குழப்பமோ கோபமோ கொள்ளாமல், ''குழந்தாய்! பயப்படாதே! உன்னை நான் காட்டிக் கொடுக்கமாட்டேன். மன்னிப்புப் பெற விரும்பும் பக்தர்களின் பாவச் செயல்களைப் பிறரிடம் வெளியிடுதல் தகாது. உன்னுடைய பிரதிநிதிதானே நான்! உனக்காகப் பிரார்த்தனை பண்ணுகிறேன். பகவான் உன்னைக் காப்பாற்றுவார்'' என்ருர்.

பாதிரிக் குருதேவர் பிரார்த்தனை புரிந்தார். திவ்ய விவிலிய நூலை (Bible) ராபர்ட்டுக்கு வழங்கிஞர். அவனுடைய எல்லாப் பாவங்களும் மன்னிக்கப்பட்டன! ''இல்லை, இல்லை, பாவங்கள் மன்னிக்கப்படவில்லை. நான் தண்டிக்கப்படும் வரையில் என் மனம் நிம்மதி பெருது. நான் செய்த கொலைப் பாவங்களின் கோரத்திலிருந்து என்ஞல் தப்பித்துக்கொள்ள இயலாது. இன்று முதல் நாற்கால் மிருகம்போல் இருந்து வருவேன். கொடிய குற்றங்களைப் புரிந்து பகவானை வணங்காதவர்கள் உண்மையிலேயே மிருகங்கள் ஆவார்கள் என்று கடவுள் விவிலிய நூலில் முழங்கியுள்ளார். மனிதனைப்போல நடமாடுவதற்கு எனக்கு உரிமை கிடையாது'' என்று உருக்கமாகக் கூறிக்கொண்டான்.

கடுமையான இந்தச் சுயச்சோதனைக்கும் உறுதியான முடிவுக்கும் அப்பால் ராபர்ட் வீட்டுக்குப் போஞன். சாப்பிட மறுத்தான். பாதிரி

குருதேவர்கூட சாப்பிடுமாறு வற்புறுத்தினுர். ஆனுல் ராபர்ட் சாப்பிடவில்லை. இரண்டு கைகளைக் கீழே ஊன்றி, நாற்கால் மனிதனுக நடக்கலானுன்! இரவு பகல் முழுதும் குதிரை களுடன் லாயத்திலேயே (குதிரையைப்போல) புற்களைக் கடித்துத் தின்றுன். குதிரைகளின் நடுவிலே வெறுந்தரையில் படுத்துக் கொண்டான். இந்த ஆச்சரியகரமான காட்சியைக் கண்டு மக்கள் அதிசயிக்கலானுர்கள். ஆனுல், ராபர்ட்டின் இப்புதிய ஒழுக்கத்தின் காரணத்தை எவராலும் அறிந்துகொள்ள முடியவில்லை. நாற்கால் பிராணியைப்போலவும் வாய் பேசாத ஊமையைப் போலவுமிருந்தபடியால் ராபர்ட்டோ தன் பழைய விருத்தாந்தத்தைப் பகரவில்லை. இவ்வாறு அவன் தன்னைத் தண்டித்துக் கொண்டான்.

இங்ஙனம், 15 வருடங்கள் கழிந்தன. அவனுடைய பாபங்களுக்கெல்லாம் பரிபூரணமான பிராயச்சித்தம் செய்தாகிவிட்டன. தூயோன் ஆனுன் ராபர்ட். ''நான்'' என்கிற அகங்காரம் தாஞய்ப் பூரணமாய் அகன்று மறைந்தது. தெய்வீக ஒளிவீசப் பெற்றவனுய் மாறிவிட்டான்.

தள்ளாத வயது வரவே; பலவீனத்தால் தாக்கப்பட்ட ராபர்ட் படுத்த படுக்கையாய் இருந்தான். நகர முடியவில்லை. ஆச்சரியகரமான இந்த நாற்கால் மனிதனைத் தரிசித்து, நல்லாசி பெறுவதற்கு, அக் குதிரை லாயத்தில் மக்கள் திரள் திரளாக வரலானுர்கள். நோயாளிகள் அவனுடைய பாதங்களைத் தொட்டார்கள். என்ன ஆச்சரியம்! அவர்களுடைய நோய் எல்லாம் குணமாகிப் பூரண ஆரோக்கிய சீலர்களாகத் திகழலானுர்கள். ராபர்ட் பெரிய மாந்திரீகன்

என்கிற பேரும் புகழும் நாடெங்கும் பரவலாயின. குணங்காணமுடியாத நாட்பட்ட வியாதிகள் யாவும் அவன் தொட்ட மாத்திரத்திலே சுவஸ்தமாயின. சுய தண்டனையை நிறைவேற்றிக் கொண்டானுதலால், விதியையும் ஜயித்து வெற்றி ஏற்படலாயிற்று. ராபர்ட் மனத்தில் ஊடாடிய மகா தீய வாஸனைகள் யாவும் பஸ்மீகரமாய்ப் போயின. அவன் ஓர் மஹானுக மாறிவிட்டான்.

# 30. துரதிருஷ்டத்தைத் தடுக்கும் இரகசியம்

ராம்லால் சேட் கடைக்கு முன்னால் ஓர் நாள் மத்தியானம், ஒரு சந்நியாசி நின்றுகொண்டிருந் தார். சேட் தம் வேலையில் கவனமாய் இருந்தார். ராம்லால் சேட் பெருத்த வியாபாரி. உலகத்தில் சந்தோஷமாயிருப்பதற்கு வேண்டிய சகலமும் அவரிடம் உண்டு. சம்ஸார ஸாகரத்தில் மித மிஞ்சிய அளவில் ஆழ்ந்திருந்தாராதலால், கடவுள் இருக்கிறார் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டதே கிடையாது. கடவுள் அவரைத் திருத்த வேண்டுமென விருப்பியே அவர் முன்னால் சாதுவின் வடிவத்தில் தோன்றினார். மிக்க அலட்சியமான பார்வையுடன், ராம்லால் அச் சாதுவுக்கு ஒரு அணுவைக் கொடுக்குமாறு தம் சேவகனை ஏவினார். ஆனால், சாது அதை ஏற்றுக் கொள்ள மறுத்தார். ''சீதாராம் — ராதே சியாம்'' என்று ஒரு தடவை ராம்லால் உச்சரிக்க வேண்டுமெனத் தாம் விரும்புவதாகக் கூறினார். ராம்லாலுக்குக் கோபம் மூண்டது. ''எனக்கு உன்னுடன் — சோம்பேறிகளுடன் பேச நேரம் இல்லை. எனக்கு வேலை இருக்கிறது. வெளியே போ'' என்று கடிந்து பேசினார். கர்ஜித்தார். ''ஆண்டவன் நாமத்தை ஜபிக்க நேரம் கிடையா தென்றால், அவனைச் சிந்திப்பதற்குப் போதுமான அவகாசம் தருமாறு ஆண்டவனிடம் பிரார்த்திக் கிறேன்'' என்று சாது கூறிக்கொண்டே சாவகாச மாய் நடந்தார். ராம்லால் சிரித்தார்.

மாலை 6 மணிக்கு உலாவப் புறப்பட்டுப்போய், இரவு 8 மணிக்கு ராம்லால் வீட்டுக்குத் திரும்புவது வழக்கம். அன்று ராம்லால் வெளியே போனபோது

ராம்லால்போன்று சாது வடிவந்தாங்கி வீட்டிற்குள் நுழைந்தார். ராம்லாலுக்குப் பாடம் புகட்டு வதற்கென்றே சாதுவின் வடிவத்தைத் தாங்கிய கடவுளால் என்னதான் செய்ய முடியாது? அவர் நேரே வீட்டிற்குள் போனார். குடும்பத்தினர் வியப்படைந்தனர். அன்று அவ்வளவு விரைவில் வீட்டுக்குத் திரும்பி வந்ததன் காரணத்தைக் குடும்பத்தார் எல்லோரும் கேட்டார்கள். எத்தனையோ வடிவங்களை மேற்கொள்ளும் சக்தி படைத்த ஓர் மனிதன் அந்த ஊரில் உலாவுவ தாகவும், அன்று அவன் தம்மைப்போலவே உருவத்தைத் தாங்கிக் கொண்டிருப்பதாகவும் பதில் கூறினார். எனவே, அவன் மாறு வேஷத்தில் ஏதாவது விஷமம் பண்ணினால், அதைத் தடுப் பதற்கு உங்களை எச்சரிக்கை பண்ணவே அதி விரைவில் திரும்பியதாகக் கூறினார். இதைக் கேட்டு சேட் மனைவியும் குழந்தைகளும் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார்கள். அப்பால் போலி சேட் கதவை தட்டினால் அவனை உள்ளே அனுமதிக்க லாகாதென்று அவர்களை எச்சரித்துவிட்டுத் தமது அறைக்குள் சேட் நுழைந்தார்.

உலாவப்போன உண்மை சேட் வீட்டுக்குத் திரும்பினார். கதவு தாழிடப்பட்டிருப்பதைக் கண்டார். கதவைத் தட்டினார். ''யாரது?'' என்று உள்ளிருந்து யாரோ கேட்க, அதற்கு சேட் ''நான்தான் ராம்லால்'' என்றார். ''ஏ, படு போக்கிரி! எங்களைத் தொந்தரவுபடுத்த வந்திருக் கிறாய்! கடவுளுக்கு எங்கள் நன்றி! என் கணவனார் ஏற்கனவே உள்ளே வந்துவிட்டார். உனக்கு கதவைத் திறக்கலாகாதென்று எங்களை எச்சரித் திருக்கிறார். போ, வெளியே'' என்று சேட் மனைவி கடிந்து பேசினாள். சேட் வற்புறுத்தித் தட்டவே அவர்கள் கதவைத் திறந்து பார்த்தார்கள்.

உள்ளே இருந்தவரைப்போலவே அவரும் இருப்பதைக் கண்டு அவரைப் போலி சேட் என்று தவருகக் கொண்டு அவரை அடித்து வாசலில் கட்டிப் போட்டார்கள். போலீஸ்காரர்களை அழைத்தார்கள். அவர்கள் வந்து சேட்டைக் கைவிலங்கிட்டு சாது சேட்டையும்கூட நீதி மன்றத்திற்கு இட்டுச் சென்ருர்கள். யார் உண்மை சேட், யார் போலி சேட் என்று நீதிபதியால் நிர்ணயிக்கக்கூட முடியவில்லை.

சாது சேட் அதற்கு ஓர் உபாயத்தை நீதிபதியிடம் உரைத்தார். புதிய வீட்டைக் கட்டினதிலோ, அவரது பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்ததிலோ என்ன செலவாயிற்று என்பதைச் சட்டென்று கூறிவிட்டால், அவரையே உண்மையான சேட் என்று நிச்சயிக்கலாம் என்று கூறினுர். ஐயோ, பாவம்! உண்மையான சேட் அவற்றை ஞாபகப்படுத்திக்கொள்ள முடியவில்லை. பின், நீதிபதி சாது சேட்டைப் பார்த்தார். கடவுளே அவராதலால், தமது சர்வஞ்ஞத்துவத்தினுல் செலவான தொகைகளை அறிந்து சட்டென்று கூறினுர். நீதிபதி ருஜுப்படுத்தி அவற்றைச் சரியெனக் கண்டுபிடித்தார். சாது சேட்டையே உண்மையானவரென்று தீர்ப்புக் கூறி, உண்மை சேட்டை உடனே நகரத்தைவிட்டு வெளியேற வேண்டுமென்றும் ஆக்ஞாபித்தார்.

நிகழ்ச்சிகளின் அசாதாரணமான திருப்பத்தினுல் சோர்வடைந்த சேட் பிருந்தாவனம் என்ற புண்ணிய ஸ்தலத்தை நோக்கிச் சென்ருர். அங்கே, இறைவன் நாமாவளியையே சதாகாலமும் ஜெபித்துக்கொண்டு காலங்கழிக்கலானுர். மாதம் செல்லச் செல்ல, ராம்லால் சேட்டுக்கு மனைவி, குழந்தைகள், வர்த்தக ஸ்தாபனம் பற்றிய

விவரங்கள் யாவும் மறந்துவரலாயின. ஒரு நாள் சாது அவருக்கு முன்னால் தோன்றி, ''என்னைத் தெரிகிறதா? இறைவனது நாமாவளியை இப்போது ஜெபிப்பீரா? அதற்குப் போதுமான அவகாசம் கிடைத்திருக்கிறதா?'' என்று வினவினார். அவரது பாதாரவிந்தங்களில் அடியற்ற மரம் போல சேட் விழுந்து விம்மி விம்மி அழுத வண்ணம், ''ஹே! இரக்ஷகமூர்த்தியே! பரிதாபகர மான என் கதையக் கேளுங்கள். பயங்கரமான துரதிர்ஷ்டத்தின் காரணமாகவே ஆண்டவரின் நாமத்தை உச்சரிப்பதற்கு என் வாழ்க்கை முழுதும் அர்ப்பணிக்க இப்போது முடிகிறது'' என்று ஆரம்பித்துத் தமது கதையைச் சொன்னார். அப்பால் சாது ''அதெல்லாம் என்னுடைய வேலை. உம்முடைய உருவத்தைப்போல், என்னை மாற்றிக் கொண்டு இதுவரை நிகழ்ந்தனவெல்லாம் உமக்காக நடத்திவைத்தேன். இப்போது எனது வடிவத்தை உமது வீட்டிலிருந்து திரும்பப் பெற்றுக்கொண்டேன். ஆகையால், நீர் இப்போது திரும்பிப் போகலாம்'' என்று கூறினார். சேட் அச் சாதுவைப் பெரிதும் பாராட்டி நன்றி செலுத்தி, ''மஹா தேவரே! இறைவன் நாமத்தில் ஏற்பட்ட பக்தி பரவசத்திலேயே நான் ஆழ்ந்து தவழ்கின்றேன். திரும்பிப் போகவே மாட்டேன்'' என்று சிறந்த பக்தி சிரத்தையோடு செப்பினார். ''சுபிட்சமான அதிர்ஷ்ட காலத்தில், மனிதன் ஒரு தடவையேனும் இறைவனை நினைப்பானானால், அப்பால் அவனுக்குத் துரதிர்ஷ்டம் ஏன் வரப்போகிறது?'' என்று கூறிக்கொண்டே சாது வழி நடந்தார்.

ஓம் தத் ஸத்

# 31. மறைந்த திருடன்

இந்திய சாம்ராஜ்யத்தின் சமீபத்தில் இருந்த மலைக்குன்றில் கள்வர் கூட்டம் ஒன்று வசித்து வந்தது. மலைக்குன்றினின்று திடீரென இறங்கி வந்து நகரில் புகுந்து சொத்துக்களை கொள்ளை அடித்து ஓடிவிடுவார்கள். வெகுகாலமாக அரசனுல்கூட இவர்களைப் பிடிக்க முடியாமலிருந்தது.

பல கஷ்ட நஷ்ட தொந்தரவுகளுக்குப் பிறகு ராஜாங்க சிப்பாய்கள் இவர்களைக் கையும் மெய்யுமாகப் பிடித்து அரண்மனைக்கு இழுத்து வந்தார்கள். அரசர் தர்பாரில் வழக்கு விசாரிக்கப்பட்டது. அரசர் அக் கள்வர்கள் அனைவரையும் சிரச்சேதம் புரியுமாறு உத்தரவிட்டார்.

மந்திரி அக் கள்வர் கூட்டத்திலே அழகான பையன் ஒருவன் இருப்பதைக் கண்டு, மன்னரை நோக்கி, ''மன்னர் பெருமானே! ஓர் விண்ணப்பம். இந்தப் பையன் குற்றவாளியல்ல — நல்லவனுகத் திருந்தக் கூடியவனென்று அவனுடைய முகமே எடுத்துக் காட்டுகிறது. தக்க பயிற்சி அளிக்கப் பட்டால், தங்களுடைய பண்பு நிறைந்த நகரவாசியாக வளர்ந்து வருவான். அவனை மன்னித்து விடுங்கள். என் வீட்டிலேயே அவனை நானே வளர்த்து வருவேன்'' என்று கூறினுன். அரசர் முதலில் மறுத்து, ''மந்திரி! எப்படியானுலும்சரி, அவன் ஓர் கள்வனின் குழந்தை. அவனிடம் திருட்டுச் சம்ஸ்காரங்கள் நிறைந்துள்ளன. அவன் பெரியவனுக வளர்ந்தால், அவனிடம் இத்தகைய சம்ஸ்காரங்களே வளரும். அவனைத் தொலைத்து விடுங்கள்'' என்றுர்.

ஆனால், மந்திரியோ பையன் சார்பாக உருக்க மாக வாதாடினான். கடைசியில் அரசர் ஒப்புக் கொண்டார். மந்திரி அப்பையனை வளர்த்து வந்தான். அப்பையனுக்கு நல்ல படிப்பு, நல்ல சூழ்நிலை, நல்ல உணவு, ஆடை, உடை ஆகியவை அளிக்கப்பட்டன. நற்குணமுள்ள நல்ல நண்பர் களுடன் பழகினான். இங்ஙனம், பையன் புனித மான — நெறியான வாழ்க்கையை கடைப்பிடித் தான். அதிசயமான இம்மாறுதலைக் கண்டு ஒவ்வொருவரும் வியப்பில் மூழ்கினார்கள். இப்போது பையன் வலிமையான வாலிபனாக வளர்ந்து விட்டான்.

பரிசோதனையின் பொருட்டு, மந்திரி அந் நகரத்தைவிட்டு எங்கோ போயிருந்தான். கட்டுப் பாடான வாழ்க்கை தளர்ச்சி அடைந்த க்ஷணமே, தன்னிஷ்டம் போல் நடக்கச் சுதந்திரம் பெற்ற வனென்று பையன் அறியலானான். தன் தகப்ப னாரின் பழைய சினேகிதர்களான கள்வர்களுடன் பழகத் தொடங்கினான்! ஒரு நாள் குன்றின் மீதேறும் திருடர்களில் சிலரைச் சந்தித்தான். திடீரென ஓர் ஆசை அவனைப் பிடித்தாட்டியது. மந்திரி குமாரனைக் கொலைசெய்து, எல்லாச் சொத் துக்களையும் கொள்ளையடித்துக் கொண்டு குன்றின் மேல் ஓடிப்போய்விட வேண்டுமென்பதே அந்த பொல்லாத ஆசை. அன்றிரவே, கொலைபண்ணி நகைகளும் பணமும் கொள்ளையடித்துக் கொண்டு மந்திரி வீட்டை விட்டு ஓடிப்போய் இன்னமும் உயிரோடிருந்த பழைய கள்வர் கூட்டத்தில் கலந்து கொண்டான்.

சில நாட்களுக்குப்பிறகு மந்திரி திரும்பிவந்து பார்த்தான். வீடு பாழடைந்து கிடந்தது. எல்லா வற்றையும் அவன் யூகித்துக் கொண்டான். மன்னர்

முன்னிலையில் மந்திரி அவமானத்தில் தலைகுனிந்த வண்ணம் "மகாப்பிரபுவே! தாங்கள் சொன்னது நிரம்பவும் வாஸ்தவம். பழந் தோழர்களுடன் கலந்துகொள்ளத்தொடங்கிய அந்தக்ஷணம் முதல், அவன் தனது குரூரத்தனமான பழைய வாசனைக்கே மாறிவிட்டான்" என்றான்.

மனத்தின் தன்மையும் இப்படிப் பட்டதே யாகும். தீய ஸம்ஸ்காரங்கள் அங்கே கிடக்கின்றன. தங்களைக் காட்டிக்கொள்வதற்குச் சமயம் இல்லாத போது, அவை மனத்தில் அமிழ்ந்து கிடக்கின்றன. நல்லோர் இணக்கத்திஞல் அவற்றிற்குப் புஷ்டி மறுக்கப்படுகின்றது. அவை பட்டினி கிடந்து மெலிந்து நலிவடைகின்றன. ஆனால் அவை முற்றிலும் மரணமடைவதில்லை. தீயோர் இணக்கம் அவற்றிற்குப் புத்துயிர் அளிக்கிறது. தக்கதோர் வாய்ப்பு கிட்டியவுடனே, அவை தங்கள் சுயரூபத்துடன் தலை தூக்கலாகும்! பிரஹ்மனைக் குறித்துத் தியானஞ்செய்வதன் வாயிலாக, இந்த சம்ஸ்காரங்கள் முற்றிலும் வறுக்கப்படவேண்டும். சமாதியில் மாத்திரமே இச் சம்ஸ்காரங்கள் புனருத்தாரணமில்லாமல் பொரிக்கப்படுகின்றன. அந் நிலையைப் பெறும்வரையில், மனிதன் மிகமிக ஜாக்கிரதையுடன் பாடுபடுதல்வேண்டும். அவன் எப்போதும் நல்லோருடைய இணக்கத்திலேயே இயங்க வேண்டும். தீயோர் சகவாசத்தைத் தயவு தாக்ஷிண்யமின்றித் தொலைக்க வேண்டும். தினசரி சாதனையில் மிகவும் ஒழுங்காய் இருப்பதல்லாமல், இடையறாமல் நல்ல பண்புகளை வளர்ப்பதில் நாட்டமும் சிரத்தையும் கொண்டு உழைக்க வேண்டும்.

## 32. பிராரப்தத்தின் மகிமை

வியாச பகவானிடம் பரீட்சித்து, ''ஹே பிரபுவே! தர்மத்தை நன்குணர்ந்த யுதிஷ்டிரர் சூதாடித் தம் ராஜ்ஜியத்தை இழந்து விட்டதன் காரணம் என்ன? தாம் செய்யப் போகும் காரியம் எவ்வளவு அநீதமானது என்பதை அவர் உணர்ந்து கொண்டு அதினின்று விலகி இருக்கக் கூடாதா?'' என்று வினவினார்.

அதற்கு வியாசர், ''என்னருமைப் பரீட்சித்தே! ஞானி ஒருவனின் உணர்வைக்கூட மேகம்போல் மறைத்துவிடக்கூடிய வலிமை பிராரப்தத்திற்கு உண்டு. மாயை மா வலிமை படைத்தது. அது மனிதனை மயக்குவதன்றி தர்மத்திற்கு அனுசரணையாயில்லாத காரியங்களைச் செய்யத் தூண்டுகிறது'' என்று இயம்பினார்.

''என் ஐயாவே! இதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். நமது பிராரப்தத்தை புத்திசாலித் தனமான வழிகளில் ரத்துசெய்யக் கூடுமெனக் கருதுகிறேன்''.

''நான் தங்களுக்குப் பிரத்தியட்சமாய்க் காட்டுகிறேன்! தங்களுக்கு என்ன நடக்கப் போகிறதென்பதை நான் சொல்லுகிறேன். இந்த எதிர்காலமுரைக்கும் சம்பிரதாயத்தில் எவ்வளவு பொய்த்துப் போகிறதென்பதை நீங்களே நிதரிசனமாய்க் கண்டுகொள்வீர்களாக'' என்று புன்முறுவலுடன் வியாசர் பதில் கூறினார்.

''உங்களுடைய அரண்மனையின் அருகாமையில், வெகு விரைவில் அழகான குதிரை ஒன்றைச் சந்திப்பீர்கள். அதை நீங்கள் கைப்பற்றவோ அல்லது அரண்மனைக்கு இட்டுச் செல்லவோ முற்படலாகாது என்று இப்போது நான் கூறுகிறேன். ஆனால், இந்த ஆசை மயக்கத்தைத் தடுக்க முடியாமற் போகும். அப்பால் நீங்கள் இக்குதிரையின்மீது ஏறிச் சவாரி செய்வீர்கள்—நான் கூடாது என்று சொல்லியுங்கூடத் தெற்கே நோக்கிப் புறப்படுவீர்கள். அப்போதுங்கூட அப்படிச் செய்ய வேண்டாமென்று தடுக்கிறேன். அங்கே வழியில், சௌந்தர்யம் வாய்ந்ததோர் பருவ நாயகியாக மாயையைச் சந்திக்கிறீர்கள். அவளை நீங்கள் அணுகக்கூடாதென்று நான் வற்புறுத்துகிறேன். ஆனால் உங்களை மீறியே நீங்கள் அப்படிச் சந்திப்பீர்கள். அவளை நீங்கள் அரண்மனைக்கு அழைத்துப் போகக்கூடாது. ஆனால், அழைத்துப் போவீர்கள். புனிதமான யாகம் நடத்தும் பிராம்மணர்களைக் கழுத்தறுக்கும்படி அவள் வற்புறுத்துவாள். இதைக் காதில் போட்டுக் கொள்ளாதீர்கள். அது உங்களால் முடியாது. அவள் துர்ப்போதனையின்படி நீங்கள் செயலாற்றுவீர்கள். இதனால் உங்களுக்கு குஷ்டரோகம் பீடிக்கும். இப்போது நீங்கள் மிகவும் ஜாக்கிரதையாக இருங்கள்'' என்று வியாச பகவான் எதிர்காலம் பற்றி கூறிவிட்டுப் போய்விட்டார்.

குறிப்பிட்ட நாள் வந்தது. பரீட்சித்து அரண்மனையின் அருகில் ஒரு குதிரையைக் கண்டார். அது தெய்வீகக் குதிரை. அவர் தமக்குள் ''வியாசர் குதிரைமேலேரிச் சவாரி செய்யாதே என்று சொன்னார். இதை அரண்மனைக்கு இட்டுக் கொண்டு போகிறேன்'' என்று எண்ணமிட்டார். குதிரையை அரண்மனைக்குள் கொண்டுபோனார்.

அப்பால் பரீட்சித்து, "வியாசர் தெற்கு திக்கில் போகாதே என்றார். இது எவ்வளவு அழகாகச் செல்லுகிறதென்பதை நான் பார்க்க வேண்டும்" என்று எண்ணியவராய்க் குதிரைமீதேறினார் அந்தக் குதூகலமான நேரத்தில் அவர்.

"தெற்கில் என்னதான் இருக்கிறது? நான் பார்க்கட்டும். ஆனால், வியாசர் குறி சொன்னபடி மங்கையைப் பார்த்தாலும், அவளை நிராகரிப்பேன்" என்று எண்ணியவராய்த் தெற்கு திசையை நோக்கிப் புறப்பட்டார். அங்கே யௌவனப் பெண்ணைச் சந்தித்தார். அவள் கவர்ச்சிகரமாயும் உள்ளத்தைக் கொள்ளை கொள்பவளாயும் அழகே வடிவெடுத்தவளாகவும் விளங்கினாள். பரீட்சித்து, "இவளை அரண்மனைக்கு அழைத்துப் போகாதே என்றுதான் வியாசர் கூறினார். ஆனால் பேசிப் பார்க்கிறேன்" என்று எண்ணமிட்டபின், குதிரையினின்று இறங்கி மாயையுடன் பேசினார். அவர் தம்முடைய இதயத்தை அவள்பால் இழந்து விட்டார்.

"இவளுடைய துர்போதனையைக் கேட்காதே என்றும் பிராம்மணர்களுடைய கழுத்தை அறுக்காதே என்றும் வியாசர் எச்சரிக்கை செய்துள்ளார். இவளை அரண்மனைக்குள் அழைத்துச் செல்கிறேன்; ஆனால் இவளுடைய பேச்சைக் கேட்க மாட்டேன்" என்று யோசனை செய்த பிறகு அப்பேரழகியை அரண்மனைக்குள் அழைத்துச் சென்றார். யாகம் நடந்து கொண்டிருந்தது. பிராம்மணர்கள் இம் மாதைக் குறைகூறிச் சிரித்தார்கள். அவளுக்குக் கோபம் பீறிட்டுக்கொண்டு வந்தது. பரீட்சித்தைப் பார்த்து "தங்கள் பட்டத்து ராணியைக் கேலி புரியும் இவர்களின் கழுத்தை அறுங்கள்" என்று உத்தரவிட்டாள். பரீட்சித்து தயங்கினார். ஆனால்

அவளுடைய சொற்களோ தடுக்க முடியாதனவாய் இருந்தன. ஒரே ஆவேசத்தில், பரீட்சித்து தமது பட்டாக்கத்தியைக் கொண்டு பிராம்மணர்களின் கழுத்துகளை அறுத்துத் தள்ளினார். அக்கணமே தொழுநோய் எனப்படும் குஷ்ட ரோகம் பரீட் சித்தைப் பிடித்து விட்டது. அவமானத்தால் தலை குனிந்தார். அகோரமாய் அழுதார். வியாச பகவான் அவர் முன் பிரசன்னமானார்.

பரீட்சித்து வியாசபகவானின் திருவடிகளில் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு வணங்கி "ஸ்வாமி! தாங்கள் குறி சொன்னது எழுத்துக் கெழுத்து உண்மையாய் நடந்துவிட்டது. அடியேன் செய்த தவறுகள் எல்லாவற்றையும் பொறுத்து மன்னித்தருளுங்கள்" என்று பச்சாத்தாபப்பட்டுக் கசிந்துருகி வேண்டினார்.

வியாச பகவான் பரீட்சித்தைத் தொட்டார். – அக்கணமே குஷ்டரோகம் குணமாகி முன்போலத் திடசரீரியாய் விளங்கலானார்.

# 33. களைப்புற்ற குள்ளநரி

காட்டில் துப்பாக்கிச் சப்தம் எதிரொலி கிளப்பியது. ஓர் வேடன் புலியைக் குறிவைத்துத் துப்பாக்கியால் சுடுவதற்கு தயாராயிருந்தான். புலியின் கர்ஜனையும் துப்பாக்கிச் சுடுதலால் ஏற்பட்ட பயங்கரச் சப்தமும் வானத்தைப் பிளந்தன. காட்டில் உள்ள விலங்குகள் யாவும் பயங்கரமாய்ப் பீதி அடைந்தன. அவை அங்குமிங்குமாய் ஓடி புதர்களிலே ஒளிந்து கொள்ளலாயின.

ஓர் குள்ளநரி வாயுவேகமாகப் பிடித்தது ஓட்டம். அது ஓடியது, ஓடியது, காடு முழுதும் ஓடியாய் விட்டது. மணிக்கணக்கில் அது இப்படி ஓடிக் கொண்டிருந்தது. காட்டை தாண்டியாகி விட்டது.

காட்டின் எல்லையில் இக் குள்ளநரியைப் பார்த்தான் வேடன். பார்க்கப் பார்க்க அவனுக்கு குஷியா யிருந்தது. அவ்விடம் சற்றுநேரம் இளைப்பாறலாயிற்று. பயங்கரமான ஓட்டத்தினால் அது மிகவும் களைத்திருந்தது. வேடன் அதைப் பார்த்து, ''ஏ, குள்ளநரியே! ஏன் இப்படி ஓடிக் கொண்டிருந்தாய்?'' என்று கேட்டான். வேடனுடைய அடையாளம் தெரியவில்லை நரிக்கு. ஆனதால், அது ''ஐயா, காட்டுக்கு வந்தானையா வேடன் ஒருவன். புலிகளைச் சுட்டுத் தள்ளினான். என்னை ஒரு சிறு புலியாகத் தவறுதலாக அவன் நினைத்துச் சுடப் போகிறானேயென்று எண்ணினேன். ஆகையால் உயிர் தப்பித்துக்கொள்ள இப்படி ஓடி வந்தேன். நிரம்பவும் களைப்புற்றிருக்கிறேன். தயவுசெய்து தின்பதற்கு ஏதாவது கொடுங்கள்'' என்று பகர்ந்தது.

இதையெல்லாம் கேட்டு வேடன் கலகல வென்று சிரித்தான். ''ஐயோ பாவம்! ஒரு குட்டிப் புலியென்று உன்னை நான் தவறுதலாக நினைப்பேனு? இவ்வளவு தொந்தரவுக்கும் கவலைக்கும் உள்ளாக்கியது கேவலம் வீண் கற்பனை யல்லவா! உன்மீது இரக்கப்படுகிறேன்'' என்று கூறிய வேடன் கொஞ்சம் மாமிசத்தைக் கொடுத் தான் அக் குள்ளநரிக்கு.

நம்முடைய மனத்திற்கும் இம்மாதிரியான நிலை தான் ஏற்படுகிறது! கற்பனை மனிதனுக்குப் பேரழிவு பண்ணுகிறது. ஒன்றுமே இல்லாத இடத்தில் ஒரு பேயிருப்பதாகக் கற்பனைசெய்கிருன். கயிருென்று இருந்தால், அங்கே பாம்பு இருக்கிற தாகக் கற்பனை பண்ணுகிருன். ஒவ்வொரு கணமும் புத்தம் புதிய கற்பனைகளை நூற்கிறது இம் மனம்! இந்த கற்பனைகளெல்லாம் மனிதனைப் படாதபாடு படுத்தித் துன்புறுத்துகின்றன. ஏகதேசமாய் இக் கற்பனைகள் யாவும் தேவையற்றவையாயும் அஸ்தி வாரமற்றவையாயும் நிரூபணம் ஆகின்றன. எல்லாத் தொந்தரவும் கஷ்டமும் தேவையில்லை. ஏ, மனிதனே! வீணுக்குகிற இக்கெடுதலை விட்டு விடு. இத் தீய பழக்கத்தை ஒழித்துக்கட்டுவாயாக. எப்போதும் நீ சந்தோஷமாய் இருப்பாய்.

# 34. குருவுக்கு அதிகம் தெரியும்

ஸ்வாமி ஞானனந்தஜீ அவர்கள் தமது ஆசிரமத்தின் வெளியே உட்கார்ந்தவண்ணம், பாகவதத்தைப் படித்துக்கொண்டிருந்தார். வயோதிகன் ஒருவன் ஸ்வாமியை அணுகி, நாள்பட்ட வயிற்று வலியால் வருந்திக்கொண்டிருப்பதாகக் கூறிக்கொண்டே அகோரமாய் அழுதான். வறுத்த வெங்காயத்தை உபயோகிக்க வேண்டுமென்றும் அதுதான் வயிற்று வலிக்குக் கைகண்ட ஒரே மருந்தெனவும் கூறினார் ஸ்வாமிஜி.

"மஹராஜ்! ஆனல், வர்ஜிக்கப்பட்ட உணவுப் பொருளானதால், வெங்காயம் சாப்பிடலாகாதென்று ஜனங்கள் சொல்லுகிறார்களே" என்றான் வயோதிகன்.

"இல்லை, இல்லை, நீங்கள் அதைச் சாப்பிடுங்கள் சிறிதுநேரம் தாமதியுங்கள். வெங்காய வறுவலை நானே தயாரித்துத் தருகிறேன்" என்றார் ஸ்வாமிஜி. அவர் கடைக்குப்போய் வெங்காயங்களைக் கொணர்ந்து வறுத்து வயோதிகனுக்குக் கொடுத்தார்.

தூரத்திலிருந்து கொண்டே ஒரு சிறு பையன் இதையெல்லாம் நன்கு கவனித்துக்கொண்டிருந்தான். வெங்காய வறுவலின் வாசனை அச்சிறுவனுடைய வாயை ஊறச் செய்தது. கிழவன் அவ்விடத்தை விட்டுப் போனவுடன், அப்பையன் சுவாமியை மெல்ல நெருங்கி, "மஹராஜ்! எனக்கும் கொஞ்சம் வெங்காயத் துண்டுகளைக் கொடுங்கள், அதன்மீது எனக்கு அதிக ஆசை" என்றான்,

உடனே ஞானனந்தஜீ நிமிர்ந்து அமர்ந்து, கண்டிப்பான குரலில் ''இல்லை, இல்லை. வெங்காயத்தை நீ தொடவும் கூடாதே. அது மிகக் கெட்டது. இறைச்சியைக் காட்டிலும் மிகக் கெடுதலானது வெங்காயம். உனது காம விகாரங்களைத் தூண்டும் அது. தமோ குணம் படைத்த உணவுப் பொருள்'' என்றார்.

அப்பையன் கேலியாகச் சிரிக்கலானான். அவன் தன்னுடைய நண்பர்களைப் பார்த்து, ''இந்த வேஷதாரியைப் பாருங்கள்! அவருக்கு இவரே கைப்பட தயாரித்த வெங்காயத்தைத் தந்தார். ஆனால் எனக்கோ பெரிய தத்துவம் உபதேசித்து, அதைத் தொடவும் கூடாதென்று தடுக்கிறார். எப்பேர்ப்பட்ட ஸாதுவோ இவர்!'' என்று பரிகசித்தான்.

தனக்கு மறுக்கப்பட்ட அதே வெங்காயம் அவ்வயோதிகனுக்கு உற்ற உதவியாக இருந்தது என்பதை அப் பையனால் அறிந்துகொள்ள இயலவில்லை. இக்கண்டனத்தைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், ஞானனந்தாஜீ தமது பாராயணத்தில் மீண்டும் ஈடுபடலானார்.

குறிப்பிட்ட சாதகர்களுக்கு என்ன கற்றுக் கொடுக்க வேண்டுமென்பதை சாதாரண மக்களைக் காட்டிலும் சாதுக்களான குருதேவர்கள் நன்கு அறிவார்கள். சாதகர்களிடையில் அவரவர் மன பரிபாகத்திற்குத் தக்கவாறு உபதேசங்கள் மாறியே வரும். குருதேவர்களின் தீர்மானத்தைக் குறித்து நாம் வினா எழுப்புதல் கூடாது. அவர்களுடைய போதனைகள் சில சமயங்களில் முரண்பட்டவையாய்க் காணப்படும். ஆனால், உண்மையில் அவைகள் அப்படி அல்ல. அவர்களுடைய குறிக்கோளை உணர்ந்துகொள்ளக் கூடாத வகையில் நமது அஞ்ஞானமே வந்து தடுத்து விடுகிறது.



